# நாட்டுப்புறவியலில் உளவியல் பார்வை



டாக்டர் சு. சண்முகசுந்தரம்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

# நாட்டுப்புறவியலில் உளவியல் பார்வை

முனைவர் சு. சண்முகசுந்தரம்

தமிழ்த்துறைத் தலைவர்
செயின்ட் ஜோசப் கல்லூரி
பெங்களூர்




உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
டி.டி.டி.ஐ (அஞ்சல்), தரமணி, சென்னை-600113

முனைவர் ம. பொ. சிவஞானம்
அறக்கட்டளைச் சொற்பொழிவு-4
(27, 28-12-90)

**Dr. M. P. SIVAGNANAM ENDOWMENT LECTURE No. 4**

**Endowment Lecture-Publication No. 27**

---


**BIBLIOGRAPHICAL DATA**

| | | |
|---|---|---|
| Title | : | *Nattuppura Ilakkiyattil Ulaviyal Parvai* |
| Author | : | Dr. S. Shanmuga Sundaram,<br>Head, Dept. of Tamil,<br>St. Josephs College,<br>Bangalore - 560001. |
| Publishers & Copy right | : | International Institute of Tamil Studies<br>T.T.T.I. (Post), Taramani,<br>Madras-600 113 |
| Publication No | : | 161 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | December 1991 |
| Edition | : | First |
| Paper used | : | Nowkong 16 kg. |
| Size | : | 21X14 cms |
| Printing types | : | 10 Point |
| No. of Copies | : | 1200 |
| No. of Pages | : | VIII + 96 |
| Price | : | Rs. 14 |
| Printers | : | Aarthi |
| Binding | : | Board Binding |
| Artist | : | Sivam Process |
| Subject | : | Tamil Folk Literature in a Psychological Perspective |


---

# பதிப்புரை

தமிழர் வாழ்வியலை ஆய்வுக்களமாகக் கொண்டு அமைந்துள்ள 'முனைவர் ம. பொ. சிவஞானம் அறக்கட்டளை'யின் நான்காவது சொற்பொழிவு, இந்நூலாகக் கனிந்துள்ளது.

தமிழில் நிறைந்துள்ள நாட்டுப்புறப் பாடல்கள், நாட்டுப்புறக் கதைகள், பழமொழிகள், விடுகதைகள் முதலானவற்றின் துணை கொண்டு ஆசிரியர் இந்நூலைப் படைத்துள்ளார். தமிழிலக்கியத்தைப் பிற துறைகளோடு இணைத்து ஆய்வு செய்யும் போக்கு இன்று தேவையாகிறது. அதனை நிறைவேற்றும் பணியில் ஆசிரியர் தம் பங்கினை, இந்நூல் வழிச் செயல்படுத்தியுள்ளார்.

நாட்டுப்புற ஆய்வாளரில் முன்னோடியாகத் திகழும் பேராசிரியர் முனைவர் சு. சண்முக சுந்தரம், உளவியல் நோக்கில் நாட்டுப்புறவியலைச் சிறப்புற ஆய்ந்து தமிழுக்குப் பெருமை சேர்த்துள்ளார். இத்தகு ஆய்விற்கு வழிகாட்டியாக நிற்கும் அன்னாருக்கு நிறுவனம் தன் பாராட்டினையும் நன்றியினையும் தெரிவித்துக் கொள்கிறது.

நிறுவனத்தில் இவ்வறக்கட்டளை நிறுவிய சான்றோர் சொற்பொழிவிற்கு வழிவகுத்த நிறுவன முன்னாள் இயக்குநர் முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன் அவர்கள்; நூலாக்கத்திற்கு உறுதுணை நின்ற இயக்குநர் (பொறுப்பு) முனைவர் அன்னிதாமசு அவர்கள் ; நூல்பதிப்பிற்கு முழுநிலையில் ஒத்துழைப்பு நல்கிய ஆய்வு மாணாக்கர் திரு. அ. லோ. பழனிசாமி, குறுகிய காலத்தில் சிறப்புற அச்சிட்டுத் தந்துள்ள ஆர்த்தி அச்சகத்தார் அனைவருக்கும் நிறுவனத்தின் சார்பில் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புடன்,
ச. சிவகாமி

அறக்கட்டளைப் பொறுப்பாளர்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை - 113
31—12—91



## ஆசிரியர் அறிமுகம்

டாக்டர் சு. சண்முகசுந்தரம் நெல்லை மாவட்டத்து காலகரை ஊரில் பிறந்து, பாளையங்கோட்டை, சென்னை ஆகிய இடங்களில் படித்து, சென்னைப் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்று பெங்களூர் செயின்ட் ஜோசப் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார். கடந்த 20 வருடங்களாக நாட்டுப்புறக் கல்வியிலும் ஆய்விலும் அக்கறையும் ஆர்வமும கொண்டுள்ளார். இத்துறை யில இருபதுக்கு மேல் நூல்களைத் தொகுப்பாகவும் ஆய்வாகவும செய்துள்ளார். தற்போது இத்துறையின் புதிய பரிணாமங்களைப் புரிந்துகொள்ள உழைத்து வருகிறார்.

சுந்தரபாண்டியன் இவரது புனைபெயர். கவிதை, நாவல், நாடகம் என்று புத்திலக்கியம படைத்து வரும் இவர், தமிழ் இலக்கியத்தின் திக்குகளில் எல்லாம் தன் விமர்சன வேர்களை வளர்த்து வருகிறார்.

# உள்ளுறை

பக்கம்

# சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| ஆ. நோ. நா. ம. | ... | ஆய்வு நோக்கில் நாட்டுப்புற மருத்துவம் |
| ஏ. எ. க. | ... | ஏட்டில் எழுதா கவிதைகள் |
| கா. வி. | ... | காதலர் விடுகதைகள் |
| கு. உ. | ... | குழந்தை உலகம் |
| கொ. நா. பா. | ... | கொங்கு நாட்டுப்புறப் பாடல்கள் |
| தி. மா. நா. ப. | ... | திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புற பாடல்களில் சமுதாய அமைப்பு |
| நா. | ... | நாட்டார் வழக்காற்றியல் |
| நா. இ. | ... | நாட்டுப்புறவியல் |
| நா. இ. ஆ. | ... | நாட்டுப்புறவியலாய்வு |
| நா. க. | ... | நாட்டுப்புறக் கதைகள், கட்டுரைகள் |
| தா. | ... | தாலாட்டு |
| பா. ம. பா. | ... | பாலை மலைப் பாடல்கள் |
| மலை | ... | மலையருவி |
| மே. த நா. | ... | மேற்கு தமிழக நாட்டுப்புறவியல் ஓர் ஆய்வு |
| ஜூ. வி. | ... | ஜூனியர் விகடன் |

# நாட்டுப்புறவியலும் உளவியலும்

## நாட்டுப்புறவியல் விளக்கம்

நாட்டுப்புறத்து மக்களின் பழக்கவழக்கங்கள், பண்பாட்டுக் கூறுகள், அவர்களது எண்ணங்கள், நம்பிக்கைகள், வாழ்க்கை முறை, தொழில், கனவுகள், உறவுமுறைகள், ஆசைகள், எதிர் பார்ப்புகள், உணர்வுகள், போன்றவற்றை விளக்கும் கலை, இலக்கியம், வழக்காறு ஆகியவற்றைக் கண்டறிந்து விளக்கும் இயலே நாட்டுப்புறவியல் ஆகும்.

நாட்டுப்புறப் பாடல்கள், கதைகள், கதைப்பாடல்கள், பழ, மொழிகள், விடுகதைகள் போன்றவை நாட்டுப்புற இலக்கியங் களாகும்.

கைவினைக்கலைகள், கூத்துகள், விளையாடல்கள், விழாக்கள், ஆடல்கள், மருத்துவம், ஓவியம். சிற்பம் போன்றவை நாட்டுப்புறக்கலைகளாகும்.

பண்பாடுகள், பழக்கவழக்கங்கள், சடங்குகள், நம்பிக் கைகள் போன்றன நாட்டுப்புற வழக்காறுகள் ஆகும்.

## உளவியலும் வகைகளும்

உளவியல் என்பது மனித உள்ளத்தின் தன்மைகளை எடுத்து விளக்குவது. சைக்கி (Psyche) லோகஸ் (Logus) எனும் இரு கிரேக்க சொற்களும் இணைந்து சைக்காலஜி என்று வழங்கப்படுகிறது. சைக்கி என்றால் ஆன்மா எனவும் லோகஸ் என்றால் அறிவியல் எனவும் பொருள் கற்பிக்கப்படுகிறது. இதனடிப்படையில் முதலில் உளவியலை ஆன்மா பற்றி பயிலும் இயலாகக் கருதினர் பின்னர் இவ்விளக்கம் மாற, உளவியல், தத்துவத்தில் ஒரு பிரிவாக இருந்த நிலைமாறித் தனித்த ஒரு இயலாகச் செயல்படத் துவங்கிற்று மனம் என்ற சொல் ஆன்மா (Soul) என்ற கருத்துருவமாக (Concept) இருப்பதால் - எளிதில் பார்த்துணர முடியாத நுண்பொருளானதால் அப்படி ஆத்மா என்ற ஒன்றே இல்லை என்று வாதிட்டனர். சிலர் அது மூளை யில் இருக்கிறது என்றும் சிலர் அது இதயத்துக்குள் இருக்கிறது என்றும் சிலர் அது கையளவு உருவமுடைய ஒரு பொருள் என்றும்

இன்னும் சிலரோ அது தான் தங்கி இருக்கும் உடலின் அளவு கொண்டது என்றும் இன்னும் சிலரோ அது அணு அளவு பரிமாணம் உடையது என்றும் கூறி வாதிட்டனர். உளவியலாளர்களோ இதனின்றும் வேறுபட்டுத் தனித்து சிந்தித்து மனம் என்பது ஆன்மா அன்று உள்ளமே என்று விளக்கி இவ்வியலை உளவியல் என்றனர், என்பார் டாக்டர் செ. ரா. பரமேஷ் (சமூக உளவியல், ப. 3).

இவற்றை,

i) பொது உளவியல் (General Psychology)
ii) ஒப்பு உளவியல் (Comparative Psychology)
iii) பிறழ்வு உளவியல் (Abnormal Psychology)
iv) உடற் கூற்றியல் உளவியல் (Physiological Psychology)
v) சமூக உளவியல் (Social Psychology)
vi) கல்வி உளவியல் (Educational Psychology)
vii) தொழில் இட உளவியல் (Industrial Psychology)

என்று ஏழு வகையாகப் பகுக்கலாம் என்பார் டாக்டர். மு. இராசமாணிக்கம் (மனித உள்ளம், ப. 21).

## உளவியல் அணுகுமுறை

மனிதன் தன் எண்ணங்களை, கொள்கைகளை, ஆர்வத்தினைப் பல்வேறு சமுதாயச் சூழல்களில் வெளியிடுகிறான். மொழியை இதற்காகப் பயன்படுத்துகிறான். பல்வேறு பொருட்களைப்பற்றி கருத்துக்களைப்பற்றி கொள்கைகளைப் பற்றி, தனது மனப்பான்மையினை வெளியிடுகின்றான். சமுதாயப் பழக்க வழக்கங்களைப் பின்பற்றுவதில் மேற்கொள்வதில் பிறரிடமிருந்து வேறுபடுகிறான். இன்னும் சில பழக்க வழக்கங்களையும் புதுமைகளையும் சூழ்நிலைக்கு ஏற்ப மாற்றியமைத்துக் கொள்கிறான். பல்வேறு சமுதாயப் பிரச்சினைகளைச் சந்திக்க நேரும் போது அவற்றைத்தீர்ப்பதற்கான வழிகளைக் கண்டுணர்கிறான். இவ்வாறு மனிதனது சமுதாய வாழ்வு அவன் மனத்தால் கட்டுப் படுத்தப்படுகிறது. அல்லது கட்டவிழ்த்து விடப்படுகின்றது. இதைத்தான் மனம்-மொழி-சமுதாயம் (language mind and society) என்ற தொடர்பு மனிதனது மொழிப் பயன்பாட்டையும் அவனது சமுதாய வாழ்க்கையையும் தொடர்புபடுத்தி நமக்கு

விளக்குகிறது. இவற்றை அடிப்படை உளவியல் கோட்பாடுகள் நமக்குத் தருகின்றன. இவற்றோடு அடிப்படைத் தத்துவ மற்றும் மொழியியல் கருத்துகளும் கூட தேவைப்படுகின்றன என்பார் டாக்டர். கி. கருணாகரன் (நா., ப.143).

## உளவியல் ஆய்வுக் கோட்பாடு
(Psychoanalytical method)

இது ஊகத்தின் அடிப்படையில் நடத்தப் பெறுவதாகும். இதனைப் பழமையான நாட்டுப்புற வழக்காற்றியலர் (Orthodox Folklorists) வெறுப்பர்.

மீவியற்கை நிகழ்ச்சிகள் சார்ந்த புராணக்கதை, நாட்டுப் புறக்கதை போன்றவற்றுக்கு 19ஆம் நூற்றாண்டினர் குறியீட்டு விளக்கம் அளித்தனர். இதற்கு மாறாகப் புராணக்கதைகட்கும் நாட்டுப்புறக்கதைகட்கும் பாலியல் குறியீட்டு விளக்கம் தருகின்றனர் உளவியல் ஆய்வுக் கோட்பாட்டினர். ஜெர்மானிய தெய்வீகப் புராணவியலர்கட்கும் ஆஸ்ட்ரிய உளவியல் பகுப்பு ஆய்வு நாட்டுப்புற வழக்காற்றியலர்கட்கும் இடையே ஒரு நெருங்கிய தொடர்பை நாம் காணலாம். ஜெர்மானியர்களின் ஆய்வு முறையைப் பின்பற்றிய ஆஸ்திரேலியர்கள் மட்டும் மாற்றிக் கொண்டனர்.

## பொது உளவியல்

(அல்லது)

## இயல்பு உளவியல்

## (Normal Psychology)

இதுதான் நடைமுறையில் குறிப்பிடப்படுவது. உளவியலின் பல பிரிவுகளில் கண்டுபிடிக்கப்பட்ட உண்மைகளை இது பயன் படுத்திக் கொள்கிறது. எல்லா முறைகளையும் உபயோகிக்கிறது. தனிப்பட்ட பொறுப்புகள் இல்லை. மொத்தத்தில் சாதாரண மனிதனின் மன வாழ்க்கையைப் பற்றி ஆராய்வது பொது உளவியலாகும்.

இப்பகுதியில் நாட்டுப்புற இலக்கியத்தில் அமைந்துள்ள பொது வான உளவியல் கூறுகளைக் குழந்தை உளவியல், கல்வி உளவியல், சமூக உளவியல் ஆகிய தலைப்புகளில் காணலாம்.

### (i) குழந்தை உளவியல்

இதனை ஒப்பு உளவியலில் ஒரு பகுதியாகக் கொள்ளலாம்.

இளமைப் பருவமே உள்ளத்தில் கருத்துக்கள் நன்கு பதியும் காலமாகும். அக்காலத்தில் உண்டாக்கப்படும் அடிப்படையான மாறுதல்களே மனிதனது பண்பட்ட வாழ்க்கையில் துணையாக நிற்கும். குழந்தை மிகவும் உபயோகமான தன்மையுடையதாக வளர்வதற்குச் சிறந்த உதவி அளிக்க விரும்பினால் அதற்கான உதவிகளைச் செய்வதுவே குழந்தை உளவியல்.

ஒரு குழந்தையினுடைய மனத்தில் மூன்று முக்கியமான இயல்புகள் உள்ளன. அவை :

1) புறத்தேயுள்ள சூழ்நிலையால் எளிதில் தாக்கப்படக் கூடியது.

2) இயல்புத் தூண்டுதல்களால் ஆளப்படுவது.

3) மிகுந்த கற்பனை வலியுள்ளது.

இவற்றை விரிவாகக் காணலாம்.

ஒரு குழந்தை பிறப்பதற்கு முன்னேயே, அதன் மனமானது தாயின் மனப்பான்மைகளால் பெரிதும் தாக்கப்படக்கூடும். ஆகையால் கருவுற்றிருக்கும் ஒவ்வொரு தாயும், தன் தன் குழந்தையின் நலத்தைக் கருதித் தன் மனதில் சிடுசிடுப்பு, கவலை, சினம் முதலியவற்றுக்கு இடங்கொடுக்காமல் விலக்கிக் காக்க வேண்டும். எப்பொழுதும் மகிழ்ச்சியோடு இருக்க வேண்டும். நல்லமுறையில் குழந்தையைப் பெற்றெடுப்போம் என்ற நம்பிக்கை கொள்ள வேண்டும். எல்லாவித இடையூறுகளையும் இறைவன் விலக்குவான் என்று நம்ப வேண்டும்.

இதற்காகவே வளைகாப்பு, சீமந்தம் போன்ற சடங்குகளையும் அச்சடங்குகளில் நம்பிக்கையூட்டும் பாடல்களையும், பாடுகின்றனர். கை நிறைய வளையல் அணிவது, முந்தானையை நனைப்பது போன்றவற்றால் உளவியல் படி ஒரு நிறைவை ஏற்படுத்துகின்றனர். கோவில்களுக்குச் செல்லுதல், புராண இதிகாசக் கதைகளைக் கேட்பது என்று நாட்களைக் கழிக்கின்றனர்.

குழந்தை பிறந்த பிறகும் நல்ல மனநிலையோடு பாலூட்டுவதும் தாலாட்டுவதும் அவசியமாகும். இல்லாவிடில் தாயின் உணர்வுகள் பிள்ளையைப் பாதிக்கும். எனவே, தாலாட்டின் மூலம் தன் கவலைகளுக்கு வடிகால் தேடிக் கொள்கின்றனர். தம் மனத்தைத் தூய்மைப்படுத்தி, பிள்ளைகள் மனத்தையும் தூய்மையுறச் செய்கின்றனர். இரண்டாவதாக, குழந்தைப் பாடல்களிலும் நல்ல ஒழுக்கத்தையும், அறிவுரைகளையும் சமய நெறிகளையும் ஊட்டி குழந்தைகளின் உள்ளத்தைக் காப்பாற்றுகின்றனர்.

சின்னச் சின்ன கதைகள் மூலம் அதற்குத் துணிச்சலையும் தன்னம்பிக்கையையும் தருகிறோம். விளையாட்டுகளில் வென்ற குழந்தைகளுக்குப் பாராட்டு அளிக்கிறோம். விடுகதைகள் போட்டு உற்சாகம் அளிக்கிறோம். இவை, தூண்டுதல்களாக விளங்கி குழந்தைகளின் உள்ளத்தை வளர்க்கும். குழந்தைகள், இளமையில் இயல்புத் தூண்டுதல்களுக்கு உட்பட்டே வேலை செய்கின்றன. வயது ஏற ஏறத்தான் தூண்டுதல்களை அடக்கி ஆள முடியும். இயல்புத்தூண்டுதல்களே மனத்தின் அமைப்புக்கு அடிப்படையாகும். அந்த அடிப்படையின் மீதுதான் மனித வாழ்க்கைக்குரிய அளவற்ற உணர்ச்சிகளும் செயல்களுமாகிய சிக்கலான பொறி கட்டப்படுகின்றது

இயல்புத் தூண்டுதல்களே நம் வலிமைக்கு மூதற்பிறப்பிடம். இயல்பு வேகங்கள் அல்லது தூண்டுதல்கள் எத்தனை, அவற்றின் தன்மை என்ன என்பது பற்றி இன்னமும் ஒருமுக மாக முடிவுக்கு வரவில்லை. எனினும் அவற்றைத்

i) தன்னுணர்ச்சி
ii) இனஉற்பத்தி உணர்ச்சி
iii) சமுதாய உணர்ச்சி

என்று மூன்றாகப் பகுக்கலாம்.

இந்த வேகங்கள் யாவும் குழந்தை பிறக்கும் போதே அதனுள் அடங்கி மந்தமாக இருக்கின்றன. பின்பு உரிய பருவங்கள் வரும்போது ஒவ்வொன்றும் தலைகாட்டி, பேராற்ற லோடு வேலை செய்யத் தொடங்குகின்றன.

சிறுவர்கள் ஒரு பருவத்தில் வேட்டையாடும் விருப்போடும் மற்றொரு பருவத்தில் கிளி, மைனா போன்ற பறவைகளை வளர்க்கும் விருப்போடும் இருக்கிறார்கள். இவை மனித இனத்தின் வேட்டை விவசாய வாழ்வின் வெளிப்பாடுகளே.

பிள்ளைகளின் விளையாட்டுப் பருவத்தில் எல்லாத் தூண்டு தல்களும் வேலை செய்கின்றன அதனுடைய அளவுக்குமிஞ்சிய ஆற்றலே விளையாட்டாக வெளிப்படுகின்றது. அவை, பிற்கால வாழ்க்கைக்கான ஆயத்தங்கள். ஒளித்து விளையாடுவது வேட்டை விருப்புதான். பொம்மை விளையாட்டு பெண் குழந்தைகளின் குடும்பவிருப்புதான்; சடுகுடு, கள்ளன் போலீசு, பந்து போன்றவை வாழ்க்கைப் போருக்கான தயாரிப்புகளே.

எனினும், தூண்டுதல்களைப் பயிற்றுவிக்க வேண்டும். தூண்டுதல் நாகரிகமற்ற பழங்கால மனிதர்களை ஆண்டது போன்று நம்மையும் ஆளும்படி விடக்கூடாது. அதனை அடக் காமல் மடைமாற்றம் செய்யவேண்டும். அதற்கு நம் பாடல்களும் ஆடல்களும் கதைகளும் பயன்படுகின்றன. மூன்றாவது குழந்தைகளின் மனம் கற்பனையுடையது. இது கடவுளின் அரிய வரம். நாம் அதனை அழிக்காமல் அழிக்கப்படாமல் காப்பாற்ற வேண்டும். முடிந்தால் வளர்த்துவிட வேண்டும்.

நாட்டுப்புறத்து விளையாட்டுகளில் பல அவர்களுக்குப் பயன்படும். ஆனை விளையாட்டு, குதிரை விளையாட்டு போன்றவை இத்தகையன. சிறுமிகள் மணல் வீடு கட்டி சோறு கறி பொங்கி அம்மா அப்பா விளையாட்டு விளையாடுவதும் போலச் செய்தல் கற்பனையே.

தேவதைக் கதைகளைக் கேட்கும்போது, அவற்றில் ஈடு பட்டுப் பிள்ளையின் கண்கள் விரிந்து ஒளிவிடுவதையும், உடம்பெல்லாம் ஊக்கத்தால் துடிப்பதையும் நாம் காணலாம். கதையில் வரும் பாத்திரங்களும் நிகழ்ச்சிகளும் உண்மையாக இருக்குமா என்பதைப்பற்றி எண்ணுவதில்லை. இது ஒருவகை பகற்கனவு காணும் வயது என்பார் சந்திய சாமுவேல் (மனோ தத்துவமும் குடும்ப வாழ்க்கையும், ப. 23-40).

## தாலாட்டும் மனப்பதிவும்

குழந்தைகளைத் தூங்கச் செய்வதற்காகத் தாய்மார்கள் தாலாட்டு பாடுகின்றனர். அழுது அடம் பிடிக்கும் குழந்தைகளை அடக்கும் ஆயுதம் இது. விழித்துக் கொண்டிருக்கும் குழந்தைக்கு வேடிக்கை காட்டும் தாய், தூங்கப்பண்ணும்போது பண்ணி சைத்துப் பாடுகிறாள்.

தாலாட்டில் உள்ள உயர்ந்த கருத்துக்கள் குழந்தைக்குப் புரியுமா? இது ஓர் ஐயம்.

நாம் பெறும் அனுபவத்தில் பல நம் விழிப்பு நிலைப் பகுதி யிலே உள்ளன. சில உள்ளத்தின் ஆழத்தில் சென்று அதன் புதைந்த நிலைப் பகுதியில் தங்குகின்றன. தாலாட்டில் உள்ள உயர்ந்த கருத்துக்களைப் பொறுத்தமட்டில் அவை தாய் முலைப் பாலே போல் உவப்புடன் அளிக்கப்படுவதால் குழந்தையின் உள்ளத்தின் ஆழத்தில் சென்று தங்குகின்றன. நாம் பிற்கால நலனுக்காகச் சேமித்து வைக்கப்படும் பொருளே போன்று, அவை குழந்தை வளரும்போது அதன் குணநல வளர்ச்சிக்குப் பெரிதும் பயன்படுகின்றன. நல்ல தாலாட்டுக்களைப் பாடும் வழக்க மிருக்கும் சூழ்நிலையில் வளரும் குழந்தைகள் உயர்ந்த பண்பு களையும், கவிதையுள்ளத்தையும் இயல்பாகவே பெற்றிருப்பர்.

பிரகலாதன் கருவில் இருக்கும்போது கருத்துக்களை அறிந்து பக்தனாக வளர்ந்தான் என்று புராணக் கதை கூறும்.

அபிமன்யு சக்ர வியூகத்தை உடைத்து உள்புகக் கற்றதும் கருவிலே என்பது இதிகாசக் கதை.

சிவாஜியின் குழந்தைப் பருவத்திலேயே தாய் ஜீஜிபாய் வீரப்பாடல்களையும் கதைகளையும் கூறி வீரனாக்கி வளர்த்தாள் என்பதை வரலாறு கூறும்.

கமலஹாசனைக் குழந்தைப் பருவத்திலேயே ஆடவும் பாடவும் பல மொழிகளைக் கேட்கவும் வைத்து, சிறந்த கலைஞனாக்கியதை அவரது தந்தையின் பேட்டி கூறும்.

தாலாட்டுகளும் இப்பணியைச் செய்கின்றன.

மனிதன் காண்பன கேட்பன அனைத்தும் அவன் கவனித்தாலும் கவனிக்காவிட்டாலும் அவனுடைய மூளையில் பதிவாகி விடுகின்றன. மனிதன் மூளையில் பதிவு உடற்கூற்றின் இயற்கை. வெளிப்பாடு மனிதப்பண்பின் வேறுபாடுகளால் வரும் விளைவு என்பார் ராபர்ட் பிர்ட்ஜ்ஸஸ். குழந்தைப்பருவத்தில் இப்பதிவு பசுமரத்தாணி போல் பதியும். அதுவும் பாதி உறக்கத்தில் இருக்கும்போது கேட்கும் கருத்துக்கள் ஆழமாகவே பதிகின்றன. குழந்தைப்பருவத்தில் தாய்பாடும் தாலாட்டில் இசை உறக்கத்திற்குப் பயன்படுவது போலவே இயல் உள்ளத்துக்குப் பயன்படும் என்பர்.

"ஊர் வாழ தேசம் வாழ
இனம் சுற்றம் எல்லோரும் வாழ
குருவுக்கும் சிவனுக்கும்
நல்ல பிள்ளையாய் இருந்து வாழ்க"
(தா. ப. 88)

என்று அறிவுரைகளோடு தாலாட்டுகின்றனர். "தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்" என்று பழமொழி இதைத்தான் கூறுகின்றது.

தாலாட்டுப் பாடல்களிலுள்ள உயர்ந்த இசைநயத்தைக் குழந்தை உணர்ந்துதான் தூங்குகிறதா, அது முடியுமா, அல்லது வெறும தொனியைக் கேட்டுத்தான் அயர்ந்து விடுகிறதா என்ற கேள்வி வரும்.

சிசுக்களுக்குத் தொடக்கத்தில் செவியுணர்வுதான் கூர்மையாகவும் ஆழமாகவும் உள்ளது என்பார் மனநூலார். எனவே, தாயின் பாட்டில் உள்ள இசை இன்பத்தைக் குழந்தை பருகுகிறது. பாரதியாரும், 'கைக்குழந்தை தானறியும் பாட்டின் சுவையதனை' என்பதும் இதைத்தான்.

## தாலாட்டுக்களில் தூண்டல் உணர்வு (Motivation)

ஒழுங்கமைவு நடத்தை என்பது தூண்டல் உணர்வு (Motivation) புலனுணர்வுக்காட்சி (Perception) கற்றல்

(Learning)ஆகியனவற்றின் இணைவு. இவையே தனிமனிதத்தை நடத்துகின்றன. இதில் தூண்டல் என்பது ஓர் உறுப்பைச் செயல் படுத்த வைப்பது. இது, நடத்தையின் எழுச்சி, இயக்கம், தொடரோட்டம் எனலாம். மனிதத்தின் அகப்புறத் தேவைகளின் வெளிப்பாடே செயல் தூண்டல் உணர்வுகளாகும்.

ஒரு தாய்க்கு, முதல் தேவை நிலை உடலைப் பொறுத்த அளவில் உள்ளதால் அவை எளிதாக நிறைந்தால் மனம் நிம்மதியுறும். பின்னர் பாதுகாப்பு, சமூகமதிப்பு, தன்னிறைவு போன்ற தேவைகள் உண்டு. இவற்றைத் தாலாட்டில் வெளிப் படுத்தி, குழந்தைக்கு ஆறுதல் சொல்கிறாள். இத்தேவைகள் தூண்டல் உணர்வை ஏற்படுத்தும். இத்தூண்டலால் சிக்கல் அல்லது விடிவு ஏற்படுவதால் வாழ்க்கை நிலைமாறும், என்பார் சா. வளவன். (நா.க., ப. 39)

## விளையாட்டுப் பாடல்களில் குழந்தை உளவியல்

" உயிரினங்கள் வாழ்க்கையில் ஆவலாகச் செய்ய வேண்டிய வேலைகளுக்காகத் தங்களைத் தயார் செய்து கொள்வது விளையாட்டு மூலமாகும்" என்பார் தாம்சன். பெண் குழந்தைகள் பிற்காலத்தில் சமையலில் சிறந்து விளங்கிட ஒரு உளவியல் பயிற்சியைத் 'தட்டலங்கா புட்டலங்கா' என்ற விளையாட்டு தருகின்றது. காயின் விளைச்சலைக் கண்டறிவது, நெல் வேக வைப்பது, காயப் போடுவது, காய்ந்ததைப் பார்த்து குத்துவது, விறகு பொறுக்கப் போவது போன்றவற்றை இவ்விளையாட்டு விளக்கும்.

குழந்தைகள் விளையாடுவதற்கு, உள நூலார் வேறு காரணங்களையும் கூறியுள்ளனர்.

i) பரிணாம வளர்ச்சியின் பல படிகளைத் தாண்டி இந்தப் பிறவி வந்திருக்கிறது. முந்திய பிறவிகளில் பழகிய சமூக விரோதமான பழக்கங்களைக் குழந்தை விளையாட்டின் மூலம் வெளியிட்டு விடுகிறது.

ii) குழந்தையினிடம் அபரிமதமான சக்தி உண்டாகிறது. அஃது அதன் உடல் வளர்ச்சிக்குத் தேவைப்படுவதற்கு அதிகமானது. விளையாடுவதன் மூலம் அதனைக் குழந்தை வெளியிடுகிறது.

எந்த வகையில் பார்த்தாலும் இயல்பாகவே குழந்தையிட முள்ள இந்த மனவெழுச்சி அதன் உடல் வளர்ச்சிக்கும் குண வளர்ச்சிக்கும் அறிவு வளர்ச்சிக்கும் இன்றியமையாததாகிறது.

## கூடும் இயல்பு

விளையாட்டுப் பாடல்களில் குழந்தைகள் கூடி விளையாடும் கூடும் இயல்பினை வளர்க்கும் பண்பினைக் காணலாம். தான் தனி என்பது போய் இக்குழந்தைக் கூட்டத்தில் தானும் ஒன்று என எண்ணும் மன இயல்பு வளரத் துணைசெய்கிறது. இதைத் தான் பாரதி 'கூடி விளையாடு பாப்பா' என்றார்.

" என் சோட்டுப் பிள்ளைகளா
இளவாழைத் தண்டுகளா
வாழைக் குருத்துகளா
விளையாட வாரலையோ "

என்று கூவியழைத்து கூடிவிளையாடும் பண்பைப் பெறுகின்றனர்.

## போலச் செய்தல் (Imitation)

குழந்தை உள்ளத்தில் உள்ள போலச் செய்தல் பண்பைக் குழந்தைப் பாடல்கள் வளர்க்கின்றன.

பெரியோர்கள் குழந்தைகளுக்காக,

" மழையே மழையே வா வா
மாரி மழையே வா வா

என்று பாடினால் இவர்கள்,

" புட்டே புட்டே வா வா
மாவுப் புட்டே வா வா

என்று பாடுகின்றனர். இதனை Analogical Creation என்று உளவியலார் கூறுவர்.

## மன அதிர்வுகள்

குழந்தைப் பாடல்களில் சில பொருள் தொடர்பில்லாமல் மன அதிர்வுகளாலும் அசைவுகளாலும் பிறக்கின்றன.

"அதோ பாரு மைனா
ஆசுபத்திரி கொய்னா
உங்கப்பா நயினா
நான்போறேன் சைனா"

(ச. முருகானந்தம்
நாட்டுப்புறவியல் சிந்தனைகள், ப. 109)

போன்றது இதற்குச் சான்றாகும்.

## (ii) கல்வி உளவியல்

குழந்தைகளுக்காகத் தனிப்பட்ட பாடல்கள் எல்லா மொழிகளிலும் உண்டு. சந்தமும் ஓசையும் அவற்றில் முக்கியம். குழந்தைக்குப் புரியும்படியான எளிய சொற்களிலும் மழலைப் பேச்சிலும் அவை இருக்க வேண்டும். சந்திரன் என்பதற்குப் பதிலாகச் 'சந்தமாமா' என்றால் குழந்தைகளுக்கு நன்கு விளங்கும் என்பார் ஆறு அழகப்பன் (நா.பா.தி., ப. 16).

கல்வி உளவியல் குழந்தை உளவியலை அடிப்படையாகக் கொண்டது.

குழந்தை உலகப் பாட்டுகள் குழந்தை உள்ளத்தை உணர்ந்து அமைந்தவை. அந்தப்பாட்டுகளுக்குப் பதவுரை, விசேசஉரை என்று சொல்லிக் கொண்டிருக்க முடியாது. பல பாடல்களில் வெறும் ஒலிநயம் மாத்திரம் இருக்கும். சிலவற்றில் பொருள், அடிக்குஅடி ஒட்டாமல் இருக்கும் என்பார் கி.வா.ஜ. (குழந்தை உலகம், ப. 33).

அத்துடன் குழந்தைகளுக்கு விளையாட்டு என்றால் எத்தனை ஆசை என்பதை எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை. குழந்தைகள் விளையாட்டிலே காட்டும் உற்சாகத்தைத் தெரிந்து, அவர்களின் மன இயலைக் கண்டறிந்து குழந்தைக் கல்வியை விளையாட்டாகவே போதிக்க வேண்டும் என்பார்.

குழந்தைகளுக்கு வார்த்தைகளைக் கற்றுக் கொடுக்கும் தாய்மார்கள் அதற்கென்று சில பாடல்களைச் சொல்லித் தருவார்கள். அந்தப் பாட்டிலே பொருள் தொடர்போ அபூர்வமான கருத்தோ இருக்க வேண்டும் என்பது அவசியம் இல்லை. வார்த்தை குழந்தைகள் நாவிலே புரள வேண்டும் என்பதுதான் அவர்கள் கருத்து என்பார், கி.வா.ஜ., (நா. இ. ப. 26).

பாட்டு குழந்தைகளுக்கு முழுவதும் விளங்க வேண்டும் என்பது அவசியம் இல்லை. ஆனால் முழுவதும் குழந்தை உலகத்துக்கே புரியாதபடியும் இருக்கக்கூடாது. குழந்தைகளுக்குப் புரியும் செய்திகள் அங்குமிங்கும் இருந்தால் போதும். அது நகைச்சுவை என்றால் குழந்தைக்கு அதிக ஊக்கத்தைத் தரும்.

## பக்தி உணர்வு

குழந்தையின் வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டத்திலும் பெற்றோர்களும் மற்றோர்களும் எச்சரிக்கையாக இருக்கின்றார்கள். பிஞ்சு நெஞ்சிலே, விளையாட்டோடு விளையாட்டாக இறை பக்தியையும் கடவுளின் அரும் தோற்றத்தையும் வளர்க்கின்றனர்.

சங்கு சக்கர சாமி வந்து சிங்குசிங்குன்னு ஆடுவது, குள்ள குள்ளனான குண்டு வயிறனான விநாயகன் வெள்ளிக் கொம்போடு இருப்பது போன்றவை பாடப்படும்.

## நினைவு வளர்ச்சிப் பாடல்கள்

சங்கிலித் தொடர் பாடல்கள் குழந்தைகளின் நினைவாற்றலை வளர்க்கும் தன்மையன.

"கடலோரத்தில் கப்பல் பார்
கப்பல்லே ஆயா பார்
ஆயா கையிலே தட்டைப்பார்
தட்டுமேலே பிள்ளையைப் பார்
பிள்ளை கையில் பழத்தைப்பார்
பழத்துக்குள்ளே பூச்சிபார்
பூச்சிக்குள்ளே கூண்டு பார்
கூண்டுக்குள்ளே கிளியைப்பார்
கிளிவாயிலே பழத்தைப்பார்
பழத்துக்குள்ளே பூச்சிபார்
ஆயாவுக்கு இடுப்பைச் சுத்திப் பேனைப்பார்"

(மலை. ப. 271)

இப்படி நிறைய உள்ளன.

## ஆர்வ வளர்ச்சிப் பாடல்கள்

வளரும் குழந்தைகள் வினா கேட்பதில் துடிப்புள்ளவர்களாக விளங்குகின்றனர். அவர்கள் எதற்கெடுத்தாலும் அது என்ன இது என்ன என்று கேட்பதில் ஆர்வமுள்ளவர்கள். குழந்தைப் பாடல்கள் இவ்வார்வத்தை வளர்க்கின்றன.

"என்ன ஊர்? மயிலாப்பூர்
என்ன மயில்? காட்டு மயில்
என்ன காடு? ஆர்க்காடு
என்ன ஆறு? பாலாறு
என்ன பால்? கள்ளிப்பால்
என்ன கள்ளி? இலைக்கள்ளி
என்ன இலை? மா இலை
என்ன மா? அம்மா"

இந்தப்பாடல் கேள்வி கேட்கும் ஆர்வத்தைக் குழந்தைகளிடம் வளர்க்கும்.

## எண்ணுப் பாடல்கள்

"ஒருகுடம் தண்ணி எடுத்து
ஒருபூ பூத்ததாம்
ரெண்டு குடம் தண்ணி எடுத்து
ரெண்டுபூ பூத்ததாம்"

இப்படியே பத்துவரைப் பாடுவர். இதன்மூலம் குழந்தைகளுக்கும் அவர்களின் உளவியல்படி எண் கல்வியைப் போதிக்கின்றனர். வெறும் எண்களை மட்டும் கற்றுக் கொடுத்தால் குழந்தைக்கு ஆர்வம் இருக்காது. எனவே, எண்களோடு குழந்தைகளுக்குப் பிடித்தமான பொருட்களையும் சேர்த்துப் பாட வேண்டும். பாடினால், அதனை ஆவலுடன் கேட்பர்; பாடுவர்.

## அறிவுரைப் பாடல்கள்

'ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா' என்பது பழமொழி. குழந்தைகளைத் திருத்துவது எளிது என்பது இதன் பொருள். மனிதமனம் பிஞ்சாக இருக்கும்போது திருந்திவிட்டால் பின்னர் சாவுவரை நேர்வழியில் செல்லும். எனவே, எளிய இனிய குழந்தைப் பாடல்கள் மூலம் அறிவுரைகளைத் தருகின்றனர்.

"தென்னை மரத்தில் ஏறாதே
தேங்காயைப் பறிக்காதே
பனை மரத்தில் ஏறாதே
பனங்காயைப் பறிக்காதே" (கு. உ., ப. 42)

என்று குழந்தைகளுக்கு மரங்களில் ஏறுவது துன்பத்தைத் தரும் என்ற கருத்தை விளக்குகின்றனர். குழந்தைகளும் சர்க்கரை

தடவிய மருந்துகளைப் போன்று (Sugar Coated pills) எளிதாக அறிவுரைகளைப் பெற்றுக் கொள்கின்றனர்

குழந்தைகளால் பாடப்படும் பாடல்கள், குழந்தைகளின் மனம், பருவம், விருப்பம் ஆகியவற்றிற்கு ஏற்ப அமைந்திருக்கும். அத்துடன் குழந்தைகளின் மன வளர்ச்சியையும் உடல் வளர்ச்சியையும் கவனத்தில் கொண்டிருக்கும்.

அதனால் பொருளற்றதாகவும் ஆனால் தாளமும் ஓசையும் உடையனவாக இருக்கும். பொதுவாக, விளையாட்டு, எண்ணிக்கை, பிரார்த்தனை, வாழ்க்கை அறிவு ஆகியவற்றை உணர்த்தும். வினா விடையும் சங்கிலித் தொடர்போலவும், நகைச்சுவை மிக்க கதைப்பாடலாகவும், பறவைகள், மிருகங்கள் ஆகியவற்றின் வாழ்க்கையைப் பற்றியதாகவும் இருக்கும்.

" உடுப்பு-தடுப்பு
தத்திலி-புத்திலி
மக்கான்-சுக்கான்
பால்-பரங்கி
லடும்-லுடும்
ஜீ-ஜல் " (மலை. ப. 278)

என்பது ஒரு பொருளற்ற பாடல். இது எதுகை, தாளம், ஓசை பெற்று குழந்தையின் உள்ளத்தைக் கவர்ந்து உற்சாகம் ஊட்டுகின்றது. இதில் பொருள் இல்லாவிட்டாலும் ஒருவகை இன்பம் இருக்கின்றது.

## குழந்தைகளுக்கான கதைகள்

இவை நமது குழந்தைகளுக்கு அதீத கற்பனை சரக்காகவே இருக்கின்றன. நீதியை வெளிப்படையாகக் கூறுகின்றன அவற்றை அழுத்தமாகக் கூற, மிகைப்படக்கூறும் உத்தியைக் கையாளுகின்றன. இது சிறுவர் உள்ளத்தில் கருத்துக்களைப் பதியவைக்க ஆசிரியர்கள் கையாளும் முறை.

"இவை சிறுவர் சிறுமியரின் ஒழுக்கத்தை உருவாக்க உதவின, இளமை முதல் வளர்த்தன " என்பார் வை. கோவிந்தன் (த. நா. ப., ப. iv).

## விடுகதைகள்

இது சிறுவர்களுக்குப் பிடித்த சொல் விளையாட்டு அவர்களைச் சிந்திக்கத் தூண்டிச் சிந்தனையை வளர்க்கின்றது.

விநோத வார்த்தை (Conundrum), சொல் விளையாட்டு (charade), எழுத்துக்கூட்டு (Logogriph), மாற்றெழுத்துப் புதிர் (Anagram), விகடப்பா (Epigram), ஓவிய வடிவப்புதிர்கள் (Rebus), கணித விடுகதைகள் (Arithmetic Riddle), நொடி வினா (Quiz), சொற்புதிர் (Puzzle) போன்றவை சிறுவர்களுக்கு மிகப்பிடித்தமானவை.

கூத்து

கூத்துக்களில் தோல் பாவை, பொம்மை போன்றவற்றைச் சிறுவர்களே விரும்பிப் பார்க்கின்றனர். இவர்களுக்குப் பொம்மைகளின் இயக்கங்களே அதிக ஈடுபாடுள்ளதாக உள்ளன. சிறுவர்களின் ரசனை பெரியவர்களிடம் இருப்பதுண்டு. எனவே, இக்கலைகள் குழந்தை உளவியலை அடிப்படையாகக் கொண்டு அவர்களைக் கவர முயல்கின்றன.

உளுவத்தலையன் உச்சிக்குடும்பன் நகைச்சுவைகள் அனுமான் வால் தனியாக ஆடுவது, கரகாட்டம், ஜல்லிக்கட்டு, அனுமன் சண்டைகள் போன்றவற்றைக் கூத்துக்காரர்கள் அமைக்கின்றனர்.

குழந்தைகள் கலையாக விளங்கக்கூடிய இச்சாதனத்தின் பயன்பாடு மிகப்பெரிது. குழந்தைகள் கல்விக்கு இத்தோற்பாவை நிழற்கூத்தை மிகவும் பயனுள்ளதாக ஆக்க முடியும்.

## (iii) சமூக உளவியல்

சமூகப் பிரச்சனைகளை விஞ்ஞான முறையில் ஆராய்ந்து தீர்ப்பதற்கு உளவியல் உண்மைகளைப் பயன்படுத்தும் விஞ்ஞானம் சமூக உளவியல் ஆகும். சமூக வாழ்வில் ஒருவரோடு ஒருவர் நடந்து கொள்வதை ஆராய்வதே அதன் நோக்கம். ஒருவன் மற்றவர்களோடு வாழும் பொழுது அவனுடைய உள்ளத்தில் உண்டாகும் நிகழ்ச்சிகளால் அவனுடைய ஆளுமை வளர்ச்சியில் பலவித மாற்றங்கள் உண்டாகின்றன. அவற்றையெல்லாம் சமூக உளவியல் ஆராயும் என்பர் (கலைக்களஞ்சியம், II., ப. 411).

நாட்டுப்புறவியல் பெரிதும் சமூக அறிவியலோடு தொடர்புடையது. நாட்டுப்புற இயலின் வேர்கள் சமுதாயத்தில் மிக ஆழமாகப் பரவிப் பண்பாட்டின் உயர்நிலைகளை அடைந்

துள்ளன என்பார் எஸ்பினாஸா. இவ்வியல் தனி மனிதனை விடச் சமூக மனிதனையே பெரிதும் மையமாகக் கொண்டுள்ளது.

தனி மனிதன் தன் நடத்தையைச் சமூகச் சூழ்நிலையில் அறிய விரும்புவதே சமூக உளவியல். ஒரு தனியன் தன் சக மனிதர்களிடம் கொண்டுள்ள உறவை ஆராய்வதே சமூக உளவியலின் நோக்கமாகும். தனி மனிதன் என்று அழைப்பதை விட சமூக மனிதன் என்று அழைப்பது மிகவும் பொருத்தமாகும். ஏனெனில், தனிமனிதன் என்று ஒருவனில்லை. அவன் எப்பொழுதும் சமூகத்துடன்தான் இருக்கிறான் என்பர்.

மனிதன் ஒரு சமூக மிருகம் என்று அரிஸ்டாட்டில் கூறுவதும் இதைத்தான். எனவே, சமூக உளவியல் தனி மனிதன் புறச் சூழ்நிலையில் சமூகத்துடன் கொள்ளும் தொடர்பை மட்டுமன்றி அக வழியில் நிகழும் சமூக நடத்தையையும் ஆராய்கிறது. சுருக்க மாகக் கூறுவதானால் சமூகத்திலுள்ள தனியனின் சிந்தனை உணர்ச்சி, செயல் ஆகியவற்றைப் பற்றி சமூக உளவியல் ஆராய்கிறது. சமூக நடத்தைகளை மக்டூகல் என்பார், ஒத்துணர்வு (Sympathy), பின்பற்றல் (Imitation), கருத்தேற்றம் (Suggestion) என்று மூன்று கோட்பாடுகளின் வழியில் ஆராய்ந் தார். பிளாட்டோ, மனிதமனம் அன்புகெழுமியநிலை (Affection) எழுச்சி நிலை (Cornation) அறிவுநிலை (Cognition) என்னும் மூன்று பகுதிகளாக அமைந்திருப்பதைக் கருதினார். இதனையே உளவியலார் பின்பற்றி ஒத்துணர்வை மனிதனின் அன்புகெழுமிய நிலை கொண்டும், பின்பற்றலை மனஎழுச்சி நிலை கொண்டும், கருத்தேற்றத்தை மனத்தின் அறிவுநிலை கொண்டும் சமூக நடத்தைகளை விளக்க முற்பட்டனர்.

இக்குறிப்பிட்ட மூன்று நிலைகளும் தெளிவான வரையறுக்கப் பட்ட தனித்தனி வெவ்வேறு நிலைகள் என்று கூற முடியாது. ஒன்றுக்கொன்று தொடர்புடையதாகவும், ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு மாறுந் தன்மையுடையதாகவும் உள்ளன. இதனால் ஒரே சமூக நடத்தையை ஒருவர் ஒத்துணர்வாகவும், மற்றொருவர் கருத்தேற்றமாகவும் இன்னொருவர் பின்பற்ற லாகவும் கொள்ள நேர்ந்தது. இதைத் தவிர இன்பியல் கோட் பாடு (Hedonism), தன்னலக் கோட்பாடு, ஆதிக்கக் கோட்பாடு, (Dominance), சமூக ஆக்கநிலை இருத்தக் கோட்பாடு (Social Conditioning), போன்றவையும் உள.

சமூக உளவியல் கோட்பாடுகளை ஐந்து வகையாகக் காண்பார் டாக்டர் செ. ரா. பரமேஷ் (ப. 29)

1. இன்பியல் கோட்பாடு (Hedonism)
2. தன்னலக் கோட்பாடு (Selfish)
3 இரக்கவுணர்ச்சிக் கோட்பாடு (Sympathy)
4 போலிப் பாவனை கோட்பாடு (Imitation)
5. கருத்தேற்றம் (Suggestion)

## ஒத்துணர்வு

மனிதன் சமூகத்துடன் ஒன்றி வாழத்துணை செய்யும் துலங்கல்கள் பல. அவற்றுள் ஒத்துணர்வும் ஒன்று மனிதர்கள் நெருங்கி வாழ்வதால் ஒத்துணர்வு பிறக்கின்றது. குடும்பத்தில் இந்த ஒத்துணர்வு மிகுந்து தோன்றுகின்றது.

காதல், அன்பு, பிரிவு, இரக்கம், அருள், கருணை, நட்பு, பாசம், அச்சம், வெறுப்பு, விருப்பு, பகை, பக்தி போன்ற ஒத்துணர்வுகளே மனிதனை விலங்கினின்றும் வேறுபடுத்தி, உயர்த்தி, சமூக மனிதனாக்கி இயக்குகின்றன.

தொல்காப்பியர் கூறும் எண் வகை மெய்ப்பாடுகளும் ஒத்துணர்வாகிய சமூக நடத்தைகளே எனலாம் என்பார் சி. என். குமாரசாமி. (நா.ஆ.கோ., ப. 177).

தாயின் மனத்தில் தனது குழந்தையிடம் பரிவு உணர்ச்சியும் உவகை உணர்ச்சியும் முதலிடம் பெறுகின்றன; குழந்தையில்லாத பொழுது அவள் கொண்ட துன்ப உணர்வும் ஏக்க உணர்வும் வெளிப்படுகின்றன; குழந்தையை இதிகாசப் புராண நாயகர்களோடு ஒப்புமைப்படுத்தி பாடும்போது பெருமித உணர்வும் தன் அண்ணன் தந்தை ஆகியோர் செய்த செய்யப் போகிற சீர்களை எண்ணிப் பாடும்போது பொருள் வேட்கையுணர்வும் பிள்ளை எதற்கு வேண்டும் என்ற நோக்கில் சமய உணர்வும், சமூக மதிப்புணர்வும் தன்னல உணர்வும் தோன்றுகின்றன.

இந்த ஒத்துணர்வால் இன்ப விருப்பார்வம் பிறக்கின்றது.

> "தேனே திரவியமே
> தெவிட்டாத செந்தேனே
> கோனே குலவிளக்கே
> கோமானே கண் வளராய்"

என்று தாய் தாலாட்டும்போது இன்பமுறுகிறாள்.

தொழிற்பாடல்கள் பலவகை. பொலிப்பாடல்களில் பக்தி உணர்வு; விளைச்சல் பெருக விழையும் விருப்பார்வ உணர்வு; மாடுகளின்மேல் பரிவுணர்வு,மதிப்புணர்வு போன்றவை உள்ளன.

ஏர்ப்பாடல்களில் வெயில், வேலைப்பளு போன்ற துன்ப உணர்வுகள் உள்ளன.

அரி வெட்டுவோர் பாடல்களில் கூலி, பங்கு பற்றிய பொருள் உணர்வுகளும், பால் உணர்வும், இணை விழைச்சுணர்வும் உள்ளன.

நெல் குத்துவோர் பாடல்களில் காதல், குடும்ப உணர்வுகள் உள்ளன.

மீனவர் பாடல்களில் தோழமை, வெறுப்பு, ஏழ்மை, இணை விழைச்சு, பரத்தமை உணர்வுகள் இடம் பெறுகின்றன.

"போரேரப் பொலிவளர
என்னம்மா தாயே நம்ம
பொலிக்கும்பல் தான்வளர
பொலிபொலி அம்மா"

என்று இன்பவுணர்வு அடைகின்றனர் தொழிலாளர்கள்.

கழிவிரக்கமும் சமூகப் பொருளாதார இழப்பு உணர்வுகளும் இவற்றில் வெளிப்படுகின்றன.

## ஒத்துணர்வும் மனமுறிவும்
(Sympathy and Frustration)

சமூகத்தில் வாழும் மனிதன் பல்வேறு சூழல்களால் தன் ஆசைகள் நிறைவேறாமல் அதிருப்தி அடைகிறான்; இழப்புகளால் வாழ்க்கையில் வெறுப்படைகிறான். சமூகச் சூழ்நிலைகளிலிருந்தும், தம் சொந்த வரம்புகளாலும் தோன்றும் தொல்லைகள் அல்லது தடைகள் அல்லது வேலிகள் காரணமாகத் தோல்வியுற்று துன்புறுகின்றனர். இத்தகைய சூழல்களில் மனமுறிவுக்கு ஆளாகின்றனர். ஒத்துணர்வுகள் வலுப் பெற்று மன எழுச்சிகளாகி உச்சநிலையில் மனமுறிவுகளைத் தோற்றுவிக்கின்றன.

இவற்றைத் தவிர்க்க முடியாதவர்கள் தப்பிக்க சமூக நடத்தை முறைகளைக் கையாளுகின்றனர். அதனைப் பொருத்தி அமையும் இயங்கு முறைகள் அல்லது தப்பித்துக் கொள்ளும் இயங்கு முறைகள், அல்லது தற்காப்பு இயங்கு முறைகள் என்பர்.

அவற்றுள், 1) ஈடு செய்தல்
2) காரணம் கற்பித்தல்
3) பின்னோக்கம்
4) புறத்தோற்றம்
5) புனைவு உருவாக்குதல்

ஆகியவற்றை முக்கியமானதாகக் குறிப்பிடுவர். மனமுறிவு பற்றிய கருத்துக்களை நாட்டுப்புறப்பாடல்களில் காணலாம்.

திருமணம் தடைபட்டதாலும், காதல் தோல்வியாலும், பெண்கள் மனமுறிவுக்கு உள்ளாகிப் பாடுகின்றனர்.

"நகையும் சதையும் போல்
நாமிருந்த நேசத்துக்கு
நகத்தும் சதைக்கும்-இப்ப
நஞ்ச கலந்த தென்ன ?"

"வாழைப் பழம் தின்னா
வாய் நோகும் என்று சொல்லி
தாழைப் பழம் தின்ன
தனிவழியே போன மன்னா"

என்று பாடுகிறார்கள். இதில் காதலனுக்கேற்ற பொருத்தத்தைக் காரணம் கற்பித்தலும், காதலித்த காலம் பற்றிய பின்னோக்கமும், தப்பும் வழிதேடுவதில் ஈடுசெய்தலும், சக்களத்தியைத் தாழைப்பழம் என்பதில் புனைவு செய்தலும் உள்ளன

"என்ன விட்டுட்டு
இளைய தாரம் கட்டுனியே
போற வழியிலே உன்ன
பூநாகம் தீண்டாதோ"

என்று கணவனைப் பழித்து சாபமும் இடுகிறாள்.

## ஒத்துணர்வும் ஒன்றுணர்வும்
(Sympathy and Empathy)

தனிமனிதன் பிற பொருட்களிடத்தும் மனிதனிடத்தும் சமூகத்தினிடத்தும் ஒன்றுதலையே ஒன்றுணர்ச்சி என்பர். ஒத்துணர்வுடன் நெருங்கிய உறவு இதற்கு உண்டு. ஒருவர் தம்மை மற்றவர்களிடத்து வைத்து உணர்கிறது, இது. இதனால் மனிதன் சகிப்புத்தன்மை, உலகத்துவம (Universalism) போன்ற

சமூக நடத்தைகளை வளர்க்கிறான். மனிதன் இயற்கையோடு ஒன்றி வாழவும் இது தூண்டுகிறது.

காதற்பாடல்களில் பறவைகளைத் தூதுவிடுவதும், தாலாட்டில் மாடப்புறாவை வினவுவதும், குழந்தைப் பாடல்களில் பறவை களையும் நிலாவையும் அழைப்பதும் இயற்கையோடு ஒன்று ணர்வு அடைவதாகும்.

"செட்டித் தெருவிலே
சென்டாடுகிறார் பிள்ளையார்
கோமுட்டித் தெருவிலே
குண்டாடுகிறார் பிள்ளையார்"

என்று பிள்ளையாரைப் பிள்ளையாக்கி விளையாடுவதும் ஒன்று தலாகும்.

## தன்னலக் கோட்பாடு

மனிதன் தன்னலம் உடையவன்தான். அவன் தன் இன்பம், தன் வாழ்வு, தன் பொருள் என எந்நிலையிலும் தன்னையே எண்ணி வாழ்பவன். தற்காப்பு உணர்வால்தான் அறம், நற் பண்பு, சமயம் ஆகியவற்றையும் பின்பற்றுகிறான்.

ஒருதாய், தன் குழந்தையைப் போற்றி வளர்ப்பதும் தன்னலத் தால்தான். எல்லாச் சமூக நடத்தைகளிலும் தன்னலம் மறைந் திருக்கும்.

தாலாட்டில், மலடி என்று தன்னைத் தன் கணவன் ஒதுக்கக் கூடாது; சமூகம் ஒதுக்கக் கூடாது; சொர்க்கம் ஒதுக்கக் கூடாது என்று எண்ணுகிறாள்.

ஒப்பாரி பாடல்களில் கணவன், தந்தை, தாய், சகோதரன், மகன், மகள் போன்றவர்களின் இறப்பால் ஏற்படும் செல்வம், சமூகப் பாதுகாப்பு, மரியாதை, இன்பம் போன்ற இழப்புகளையே பெரிது படுத்திக் கூறுகின்றனர்.

## தன்முனைப்பு (Ego)

தேவைகளை நிறைவேற்றிக் கொள்பவர்களைத் தன்முனைப் பாளர்கள் எனலாம்.

தாலாட்டுப் பாடல்களில் தாய்மார்கள் தம் தேவைகளும் ஆசைகளும் நிறைவேறினமையை இயல்பாகச் சொல்லியுள்ளனர்.

" பசும்பால் புகட்டி உன்
பசிதீர்க்கப் பார்த்தாலும்
பருத்திவிதை இல்லையடா
பசுபாலு தரலையடா "

என்பதில் பொருளாதாரத் தடையால் தேவை நிறைவேறாமல் போனாலும் உடற்குறையால் தாய்ப்பாலும் தர முடியாததை எண்ணும் தன் முனைப்பு உள்ளது.

## மீறிய முனைப்பு
## (Super Ego)

நிறைவேற்ற முடியாமல் தன் தேவைகளை விட்டுக்கொடுத்து வாழ்பவர்கள் மீறிய முனைப்பாளர்கள். பொருளாதாரக் குறை பாட்டினால் தேவைகளையோ ஆசைகளையோ நிறைவேற்றிக் கொள்ள முடியாமல் இடர்படுபவரே நிரம்ப உள்ளனர். சமூகத் தடைகளால் தேவைகளும் ஆசைகளும் முடங்கிப் போகின்றன. இதற்கடுத்த நிலையில் தத்தம் சூழல்களால் ஏற்படும் தடைகள் காரணமாகத் தேவைகள் கனவாகவே உள்ளன. தாலாட்டுப் பாடல்களில், தாய் தன் குழந்தை எதிர்காலத்தில் சிறப்புடன் விளங்கப் போவதாக எண்ணுவதால் தடைகளால் வரும் சலிப்பு களைப் பொறுத்துக் கொள்கிறாள் தாய். அவற்றை வெளிப் படுத்தி நிறைவு பெறுவது மீறிய முனைப்பாகும்.

" பால்குடிக்கக் கிண்ணி
பழந்திங்கச் சேனாடு
நெய் குடிக்கக் கிண்ணி
முகம்பார்க்கக் கண்ணாடி
கொண்டைக்குக் குப்பி
கொண்டு வந்தார் தாய்மாமன் "

இதில் மீறிய முனைப்பால், இவை கிடைப்பதாகப் பாடுகிறாள்.

## தூய்மைப்படுத்தல்

மனிதனுடைய வாழ்க்கை முழுவதும் அவனது சூழ்நிலை யாலும் மரபு நிலையாலும் உருவாக்கப்படுகின்றது. தன் மரபு நிலையை மாற்ற, தன் உள்ளத்தையும் அறிவையும் மனிதன் தூய்மைப்படுத்துகிறான். தான தருமங்கள், தவ விரதங்கள் யோகப் பயிற்சிகள் செய்து தன் மரபு நிலையை மாற்ற முய

கிறான் தன்னை மாற்றிக் கொள்வதோடு தனது சந்ததிக்கும் புது உருக்கொடுக்க முயல்கிறான். அச்சம், கோபம், வெறுப்பு போன்ற தாழ்ந்த மன எழுச்சிகள் தனக்கும் பிறருக்கும் கேடு விளைவிக்கக் கூடியவை. அவ்வுணர்ச்சிகளை மடை மாற்றம் செய்து தூய்மைப்படுத்தினால், அவற்றின் மூலம் தனக்கும் சமூகத் திற்கும் இன்பமும் நன்மையும் ஏற்படும். உயர்ந்த பண்புகள் வளரும். குடும்பத்தில் சண்டை சச்சரவு மூலமாக மனக்கசப்பும் குரோத உணர்ச்சியும் கொள்பவர்களுக்குக் குடும்பப் பண்பு, கடமை உணர்ச்சி, தெய்வ உணர்ச்சி ஆகியவற்றை உண்டு பண்ணி பக்தியும் அன்பும் பண்பும் வளர வகை செய்யலாம். இவ்வாறு இயற்கையாக மாற்றம் நிகழ்த்துவதனைத் தூய்மைப் படுத்துதல் என்பர் உளநூலார்.

சொக்கர் தாலாட்டு கணவன் மனைவிக்குள் நடந்த தகராறையும், அவனது மனமாற்றத்தையும் காட்டும்.

## இன்ப விருப்பார்வம்
## (Theory of Hedonism)

மனிதமனம் எப்போதும் இன்பத்தையே நாடுகின்றது நாட்டுப்புறப்பாடல்களிலும் கதைகளிலும் கலைகளிலும் இத் தகைய இன்ப விருப்புணர்வு வெளிப்படுகின்றது. பென்தாம். "மனிதன் எப்பொழுதும் இன்பமே நாடுகின்றான்; துன்பத்தை வெறுக்கின்றான்; இயன்றளவுக்குத் துன்பத்தை குறைத்து இன்பத்தைப் பெருக்கிக் கொள்ளவே முயல்கின்றான்" என்பார்.

குழந்தையைப் பெற்ற தாய்க்கு எத்துணை மகிழ்ச்சி எவ்வளவு பெருமிதம். குழந்தை அவளுடைய இன்பக் கனவு களின் உரு, அவளுடைய பிரார்த்தனையின் தவத்தின் பலன். ஆண்டவனின் அருள் பிரசாதம் தன் குடும்ப விளக்கு! சந்ததியின் தூண்.

பிள்ளை பற்றிய பெற்றோரின் நினைவுகள் எத்தனை? நோற்ற நோன்புகள் எத்தனை? செய்த தருமங்கள் எத்தனை? செய்த தவங்கள், தரிசித்த தலங்கள், ஏற்றிய விளக்குகள் எத் தனை எத்தனையோ? இத்தனைக்குப் பிறகு பெற்றெடுத்த குழந் தையைத் தொட்டிலிட்டுத் தாலாட்டும் போது தாய் தன்னை மறந்து விடுகிறாள். அவளுடைய உள்ளத்தின் ஆழத்தில்

அடைந்து கிடந்த உணர்ச்சிகள் எல்லாம் நயமான கவிதைகளாக வெளிவருகின்றன. ஆக, "இதனை உள்ளத்தின் இன்ப வெளியீடு எனலாம்" என்பார் செ. அன்னகாமு. (ஏ.எ.க.).

தாய்மார்களின் மனத்தில் உள்ள எண்ணங்கள், ஏக்கங்கள், லட்சியங்கள், நம்பிக்கைகள், இன்ப துன்பங்கள் ஆகிய அனைத்தையும் இவை பிரதிபலிக்கின்றன என்பார் மு. அருணாசலம் (தா. இ.,ப.6).

"ஆடிக்கறக்கிற மாட்டை ஆடிக் கறக்கவேணும்
பாடிக்கறக்கிற மாட்டை பாடிக் கறக்கவேணும்"

என்று பழமொழி கூறும் உளவியலை அறிந்தவர்கள். அதனால் தான் தாய்மார்கள் குழந்தைகளைத் தாலாட்டியும் சீராட்டியும் வளர்க்கின்றனர்.

குழந்தை தலையை ஆட்டும் போது அதற்குப் பாட்டு, உடம்பை அசைக்கும் போது பாட்டு, குதிப்பதற்கென்று பாட்டு, கையைவீசப்பாட்டு, காலை ஆட்ட பாட்டு, இப்படியாகக் குழந்தையின் ஆட்ட பாட்டங்களுக்கெல்லாம் அவள் பாட்டுப்பாடுகிறாள். "தேகப்பயிற்சியோடு பாட்டையும் பாடவேண்டும் என்பது இந்தக் காலத்து ஆராய்ச்சியாளர்கள் சொல்கிறார்களே அது தமிழ் நாட்டுத்தாய்மார்களுக்கு முன்பே தெரிந்திருக்கிறது," என்பார் கி. வா. ஜ. (குழந்தை உலகம், ப.21).

தாலாட்டுப் பாடல்களில் பொன்னையும் பொருளையும் பெரிதாக மதிக்கும் தாயின் மனப்போக்கே நிலவுகின்றது.

"பங்களா கட்டி
மாமரங்கள் உண்டு பண்ணி
பங்களா முன்னாலே-நீ
மல்கோவா மாம்பழமோ ?"

என்றபாடலில் பங்களா வாழ்க்கையே பெரிதாகக் கருதப் படுகின்றது. இவ்வாறு ஒரு தாய் பாடுவதற்கு அவள் உருவான சமூகம்தான் காரணம்.

## உணர்ச்சி சுத்திகரிப்பு
## (Emotional Catharsis)

பிளேட்டோ உயிரியல் உளவியலை (Biological Psychology) உருவாக்கினார்; அவர் கருத்துபடி மூளையில் மனமும் (mind) இதயத்தில் உறுதியும் (will) வயிற்றில் பசியும் ஆசைகளும் உள்ளன என்றார்.

அரிஸ்டாட்டில் செயற்பாட்டு உளவியலை (Functional Psychology) வரையறுத்துக் கூறினார். உள்ளத்தில் அடங்கிக் கிடக்கும் உணர்ச்சிகள் யாவும் அழுகை முதலான செயல்களின் மூலம் வெளிப்பட்டு விடுவதால் உள்ளம் சுத்திகரிக்கப்படுகிறது என்றார். கூத்துக்களைப் பார்ப்பவர்கள் கதைப் போக்கிலும் கதை மாந்தரின் செயல்களிலும் ஈடுபட்டுத் தங்களையே மறந்து கண்ணீர் வடிப்பதால் மனமாசு நீங்குகின்றனர். இக்கொள்கையை (Emotional Catharsis) உணர்ச்சி சுத்திகரிப்பு என்று கூறுவர்.

## தாய்மையுணர்ச்சி இயல்பூக்கமல்ல

குழந்தையை விரும்பும் எல்லாத்தாய்மார்களும் தாய்மை உணர்ச்சியால் தூண்டப் பெற்றுக் குழந்தையை விரும்புகின்றனர் என்று கூற முடியாது. நமது சமூகத்தில் குழந்தை பெறாத பெண்ணை மலடி என்று கேவலமாகப் பேசுவதைக் காண முடிகின்றது. எனவேதான் இப்பெண்டிர், பலநாள் தவசிருந்து, கோயில் தொழுது, குளம் முழுகி ஆண்டவனை இறைஞ்சுகிறார்கள். இதனால் தாய்மையுணர்ச்சி என்பது இயல்பூக்கம் அன்று. சமூகக் குடும்பச் சூழ்நிலைகளுக்கேற்பத் தோன்றும் எண்ணமே எனக்கொள்ளலாம். இது சமூக உளவியலின் பாற்பட்டது.

## துயர வடிகால்கள்

தொழிற்பாடல்கள், பெண்களின் வெளிப்படுத்த முடியாத துயரங்களின் வடிகால்களாகவும் விளங்குகின்றன.

ஆண்கள், இரண்டாந்தாரம் வைத்துக் கொள்வது சட்டப்படிக் குற்றமானாலும் இதனைத் தெரிந்தும் தெரியாமலும் பலர் செய்து வருகின்றனர். மிக்க காமம், முதல் மனைவிக்குக் குழந்தை இன்மை போன்ற காரணங்களால் இரண்டாவது பெண்ணை மணந்த கணவன் முதல் மனைவியை ஒதுக்குவதும் வெறுப்பதுவுமாக இருக்கிறான். இதனை வீட்டில் வெளிப்படுத்த முடியாத முதல் மனைவி வேலை செய்யும் இடத்தில் வேதனைக்கு வடிகால் தேடுகிறாள்

"சுத்தி சவுக்கைகளாம் - ஏ மாமா அங்க
சுருளு வச்ச திண்ணகளா-ஏ சாமி அங்க
சுருண்டு படுக்கலான்னா-ஏ மாமா அவள்
சொந்தமில்ல இன்னிட்டாளே"

என்று பாடுகிறாள்.

## மலட்டுத் துன்பம்

மலடு ஏற்படப் பல காரணங்களைக் கூறலாம். அவற்றை உடலியல் (Physiology) தொடர்பானவை உளவியல் தொடர் பானவை (Psychology) என இருவகையாகப் பகுக்கலாம். உள வியல் தொடர்பான காரணங்களை அறிய குழந்தைப்பருவம் முதற் கொண்டு வளர்ந்து வந்துள்ள வாழ்க்கைச் சூழலைக் காண வேண்டும்.

ஒப்பாரிப் பாடல்களில் பெண்களின் நிலையை நன்கு காண முடிகிறது. அவர்தம் மனதில் உள்ள கருத்துக்களையெல்லாம் தடுப்பார் யாருமின்றி வெளியிடக்கூடிய ஒரே வாய்ப்பு ஒப்பாரிதான். கல்வியறிவும் சொத்துரிமையும் அற்ற நிலையில் அரை அடிமையாக வாழும் சமுதாய அமைப்பில் அவர்களது மனத்துயரை வெளியிடும் வாய்ப்பில், மனவருத்தத்தை, வாழ்க்கை தொல்லைகளை வெளிப்படுத்தும் வடிகாலாக ஒப்பாரியைப் பயன் படுத்துகின்றனர். இந்த வாய்ப்பும் அளிக்கப்படாமலிருந்தால் பலர் பித்துப் பிடித்து போயிருப்பர். என்பார் டாக்டர். கிருஷ்ண சாமி (கொ.நா.பா., ப. 218)

சோகம் என்பது சொல்லச் சொல்ல குறைவது. ஒப்பாரிப் பாடல்களும் சோகச் சுமைதாங்கிகளே. இறப்புகளால் ஏற்படும் இழப்புகளைப் பற்றி சொல்லிச் சொல்லி ஆறுதல் அடை கின்றனர்.

“ ஆக்கும் அடுக்காளை
அனல்போகும் மேல்வீடு
ஆக்கிவெளியே வந்தா
அரசனத்தா வாரா என்பா
பொங்கும் அடுக்காளை
புகைபோகும் மேல்வீடு
பொங்கி வெளியே வந்தா
புருசனத்தா வாரா என்பா ”

என்ற பாடலில் அனலும் புகையும் பெண்மக்களின் துயரங்கள் அதற்கான வடிகால்களே மேல்வீடுகளாகிய ஒப்பாரிகள்.

## சமூகத் துன்பங்கள்

பஞ்ச காலங்களில் மக்கள் உணர்விட்டு ஊர் போய் பிழைக் கிறார்கள். தங்கள் துன்பத்தைக் கூட்டாகப் பஞ்சப் பாடல் களில் வெளியிடுகின்றனர்.

" மானத்திலே மழையுமில்லை
மழை பொழிய கானலில்லை
முட்டிகளைத் தூக்குங்கடி
முல்லையாறு போயிச்சேர "

(ஏ.எ.க., ப.49)

பசி தனித்துன்பமாக இருக்க, பஞ்சமோ சமூகத் துன்பமாகி, மனிதர் ஒன்று கூட வைக்கிறது.

## தொழில் துன்பங்கள்

மனித மனம் எதை அறிந்துள்ளதோ எதனுடன் ஊடாடுகிறதோ அதைப்பற்றித்தான் அதிகம் பேசும். இது உளவியல் காட்டும் உண்மை. நாட்டுப்புறத் தொழில் புரிவோர்க்கு உலகம், தொழிலும் தொழில் கருவிகளுமே ஆகும். அவர்கள் அறிந்தது அம்மட்டுமே. தங்களின் வாழ்க்கை அவற்றைச் சார்ந்து அமைவதால் அவற்றைப் போற்றுகின்றனர். இவற்றில் தொழில் துன்பங்களும் வெளிப்படுகின்றன.

பாடிக் கொண்டே தொழில் செய்யும் தொழிலாளி பாடுவதால் தன்னோடு பலர் வேலை செய்யும் உணர்வையும் இனிதாக வேலை முடிவடையும் நினைவையும் பெறுகின்றான். 'ஆடிப்பாடி வேலை செய்தால் அலுப்பாருக்காது' என்பார்கள். உளவியல் அடிப்படையில் தொழிற் பாடல்கள் டானிக்குகளாக விளங்குகின்றன. இதனால் அவர்கள் சுறுசுறுப்பையும் சுகத்தையும் பெறுகின்றனர்.

மீன்பிடிக்கும் தொழில் அபாயகரமானது. கடல்மேல் தொழில் செய்வதால் பாதுகாப்பு இல்லை. உயிரைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தால் அவனால் தொழிலை முழுமையாகச் செய்ய முடியாது. காதல் நினைவுகள் அந்த அச்சத்தை எளிதில் மறக்கடிக்கின்றன.

இவர்கள் தனித்துச் செல்லாமல், நண்பர்களோடும் உறவினர்களோடும் கடலுக்குள் செல்லுகின்றனர். இக்குழுவினரான எண்ணங்களும் கருத்துகளும் ஆசைகளும் பாடல்களில் வெளிப்படுகின்றனர். இது ஒருவகை மனப்பரிமாற்றம்; நண்பர்களாக இருப்பதால் அந்தரங்கங்களைக் கூடிப்பரிமாறிக் கொள்கின்றனர்.

உயிரினத்தின் நோக்கமே உண்டு உயிர் வாழ்வதுவும் உடலுறவு கொண்டு இனத்தைப் பெருக்குவதுமேயாகும்

நாட்டுபுற மக்களும் பிறப்பின் பயன் இதுவே என்று எண்ணுகின்றனர். போலித்தனங்களுக்கு ஆட்படாத இவர்கள் எப்பொழுதும் வெளிப்படையாக உள்ளத்தில் உள்ளதை உள்ளவாறு வெளிப்படுத்துகின்றனர். இது அவர்களுக்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அளிக்கின்றது.

காதல் என்பது உடலும் உள்ளமும் சார்ந்ததாகும். இங்கு அம்பாப்பாடலில், உள்ளக்காதலை விட உடல் காதலே அதிகமாகப் பேசப்படும். காரணம், அதுவே அவர்களுக்கு ஊக்கத்தைத் தருகின்றது. இது பொது குணம். ஆணும் பெண்ணும் உடலுறவைப் பற்றி நினைக்கும் போது இன்பம் அல்லது புத்துணர்ச்சியை அடைகின்றனர். உள்ளம் புத்துணர்ச்சி அடையும் போது உடலும் சுறுசுறுப்பை அடைகின்றது. மோகனராசு, அம்பாப் பாடல் பாடப்படுவதற்கான ஆறு காரணங்களை விளக்குகின்றார்

1. களைப்பைப் போக்கிக்கொள்ளும் மனஉணர்வு
2. தெய்வ நம்பிக்கை.
3. தனிமை அச்சத்தைப் போக்கும் மனநிலை.
4. பாடலால் மீன்கள் அதிகம் கிடைக்கும்.
5. அறிந்தனவற்றை மீண்டும் மீண்டும் நினைவு கொள்ளும் போக்கு
6. தொழிலில் விரைவும் ஒருங்கிணைவும் உண்டாக்க எண்ணுதல்.

(அம்பாப்பாட்டு, ப. 4)

இவற்றில் உளவியல் காரணங்களும் உள்ளன.

பல்வேறு பணிகளைச் செய்வோர் அப்பணிகளுக்கு இடையில் சோர்வு உண்டாகாமல் பார்த்துக் கொள்ளுதல் அவசியமாகின்றது. எடுத்த பணி முட்டின்றி முடிய வேண்டுமானால் அச்சோர்வு களைய பெறுதல் வேண்டும். இந்த நாட்டுப்புறப் பாடல்கள் எத்தனையோ பெரும்பெரும் பணிகளுக்கிடையில் உண்டாகும் சோர்வு நிலையினை மாற்றுவது கண்கூடு.

இரவெல்லாம் வண்டியோட்டித் தூக்கம் கெட்டுக் களைத்துச் சோர்கின்ற வண்டிக்காரன், தன்னை மறந்து தெம்பாங்குப் பாட்டிசைத்துப் போவதைக் காண்கின்றோம்.

ஓடம் ஓட்டுவதின் சோர்வு தெரியா வகையில் ஓடக்காரன் பாட்டிசைப்பதைக் காண முடியும்.

பருவ மழைக் காலங்களில் நடக்கும் நாற்றரிப்பு, நடவுகளை யெடுத்தல், கதிரறுத்தல், கதிர் சுமத்தல், கதிரடித்தல் முதலிய வேலைகளைச் செய்யும் பொழுது தொழிலாளர்கள் பாடிக் கொண்டே வேலையில் ஈடுபடுவார்கள்.

பாட்டு வேலையிலுள்ள சிரமத்தை மாற்றும்; வேலையின் வேகத்தை அதிகரிக்கும், மகிழ்ச்சியைக் கொடுக்கும்.

இது பெண்களின் உளவெளிப்பாடுதான். அவர்கள் உழவுத் தொழில் ஈடுபாடு, காதல், கள்ளக் காதல், குடும்ப நிகழ்ச்சிகள், சமுதாய பாதிப்புகள், புராணத் துணுக்குகள், தெய்வப்பக்தி போன்றவற்றை வெளிப்படுத்தும் வாயில்களாக இப்பாடல்கள் விளங்குகின்றன.

## உளவெளிப்பாடுகள்

திருமண வீடுகளில் மாப்பிள்ளை வீட்டார் மணப் பெண்ணை யும், பெண் வீட்டார் மாப்பிள்ளையையும் கேலிசெய்து பாடுகின் றனர். இதற்கு ஏசல் என்றும் பேருண்டு.

" கருப்பு கருப்பு என்று
கண்டவங்க சொன்னாங்க
எள்ளுக் கருப்பு என்று
எல்லோரும் சொன்னாங்க
அதிகக் கருப்பு என்று
அறிஞ்சவங்க சொன்னாங்க
கொட்டவந்த மேளக்காரன்
கூடக் கருப்பு என்றான்
ஆடவந்த தேவடியாள்
அதிகக் கருப்பு என்றாள் "

என்று பெண்ணைப் பழிக்கின்றனர்.

" தஞ்சாவூர் தாசில்காரன்
தாகமாய் இருக்கிறாண்டி
தாகம் தீர்க்கப்போனாயானால்
தாலிபண்ணிக் கட்டுவாண்டி "

என்று சம்பந்தியைப் பரிகாசம் செய்கிறாள் ஒருத்தி.

இத்தகைய பாடல்களால் கலகங்கள் வரினும் தடை செய்யா மல் இருக்க உளவியல் காரணங்கள் உள. வைத்தியன் காயத்

தைக் கீறிக் குணப்படுத்துவது போல, மனிதன் உள்ளூற அடங்கிக் குமுறும் எண்ணங்களை வெளிக் கொணர்ந்து கொட்டினால்தான் மனச் சாந்தியையும் ஆறுதலையும் பெறலாம்.

இது மனிதரின் நகைச்சுவை உணர்வை வளர்க்கிற உள வியல் உத்தியாகவும் விளங்குகின்றன.

கோலாட்டப் பாடல்களில்,

1. பெண்கள் கடவுள் நம்பிக்கையும் தெய்வ வழிப்பாட்டில் ஈடுபாடும்.
2. ஆடை அணிவதில் நாட்டம்.
3. திருமணம் அதைச் சார்ந்த சடங்குகள் போன்றவற்றில் பெரு விருப்பம்.
4. கிராமியத் தொழில் நுட்பம்.
5. உடலிலும் உள்ளத்திலும் மென்மை

போன்ற பெண்டிரின் உளவியலை அறிந்து கொள்ளலாம் என் பார் அ. கனகராசு. (நா. 1985, ப. 11). இதனைக் கும்மிப் பாடல்களிலும் காணலாம்.

நல்ல சொற்களைக் கேட்கிற மனம் மகிழ்ச்சி அடைகின்றது. தீயச் சொற்களைக் கேட்கிற மனம் வருத்தம் அடைகின்றது. ஒருவரை ஒழிக ஒழிக என்று அடிக்கடி திட்டுவதால் திட்டுக் கேட்டவர் மனவியல் அடிப்படையில் பாதிக்கப் பெறுகிறார். ஒருவரை வாழ்க வாழ்க என்று அடிக்கடி வாழ்த்துவதால் வாழ்த்தப்படுபவர் மனவியல் அடிப்படையில் பயன் பெறுகின் றார். திருமண வாழ்த்துப்பாடல்கள் இத்தகைய உளவியல் அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளன. இல்லறத்துள் நுழையப் போகிற மணமக்கள்,

"கட்டின மாங்கல்யம்
கண் நிறைந்த மாங்கல்யம்
பூட்டின மாங்கல்யம்
புகழுடனே தான் வாழி
ஆல்போல் தழைத்து
அருகது போல் வேரோடி
மூங்கில் போல் சுற்றம்
முசியாமல் வாழ்ந்திருப்பீர்"

எனும் வாழ்த்துக்களைக் கேட்டு மகிழ்கின்றனர்.

## சமுதாய உறவுகள்

பழமொழிகள் பல்வேறு மனித சமூகத்தினரும், பல்வேறு இனக்குழு (Tribal) மக்களிடமும் காணப்படுகின்றன. நாகரிகத்தில் முன்னேறிய மக்களிடம் மட்டுமின்றி நாகரிகத்தில் முன்னேறாத பழங்குடியினரும் பழமொழிகளைப் பயன்படுத்துகின்றனர். எங்கெல்லாம் பயன்படுத்த முடியும் என்று சமுதாயச்சூழல் அனுமதிக்கிறதோ அங்கெல்லாம் பயன்படுத்தலாம். எனவே, சமுதாய உறவில் பழமொழி இன்றியமையாத ஒரு கூறாக அமைகிறது என்பார் தே. லூர்து. (நாட்டார் வழக்காறுகள், ப. 23).

"குழந்தைக்குப் பரிசளித்த உறவினர்களை நன்றி உணர்ச்சியுடன் தாலாட்டில் ஏற்றங் கொடுத்துப் பாடும் போது, தாய் அவர்களின் நல்லெண்ணத்தையும் மகிழ்ச்சியையும் பெறுகின்றாள். தமிழகத் தாய்மார்கள் கூட்டுப்பற்றுடையவராகி, தற்செயல்களில் வெற்றி காண முயலும் ஒரு நல்ல மனப்பான்மை பெற்றுள்ளமை இப்பாடல்களின் மூலம் உணர முடிகின்றது. ஆனால் மாறி வரும் சமுதாயத்தில், சமுதாயத் தேவைகளுக்கு ஏற்ப, வாழ்க்கை முறை மாற்றம் பெற இப்பாடல்கள் செயலாற்றுப் போலிகளாக ஆகிவிடவும் வாய்ப்புண்டு", என்பார்' வெ. உதயகுமார். (இ.ப. த.ம.83; ப. 54).

கதைப்பாடல்கள் மக்களின் இன்பப் பொழுது போக்குக்காக உருவாக்கப்படுவது ; இசையுடன் உள்ளங்களைக் கவர்வது ; வாழ்க்கை முறைகளைச் சீரமைக்கும் வழிகாட்டிகளாக விளங்குவது, சமுதாயக் கூட்டிணைவுக்கு விழாக்கள், சடங்குகள் மூலம் உதவுகிறது.

## உளவியல் யதார்த்தம்

அல்லி பெண்ணாதிக்கக் குறியீடாகவே வருகிறாள். எந்த ஆணுக்கும் அடங்க மறுக்கும் அவள் கூண்டில் அடைபட்ட பின்னர், பாஞ்சாலியின் சொற்கேட்டு, அர்ச்சுனனை மணக்கச் சம்மதிக்கிறாள். அதுவும் அர்ச்சுனனுக்கு மனைவி என்ற நிலையில் இல்லாமல் அர்ச்சுனனின் மகனுக்குத் தாய் என்ற நோக்கில் சம்மதிக்கிறாள். இது போன்றப் பாத்திரம் (Typical character) ஒரு கற்பனை யதார்த்தமே. இதனையே ஃபிராய்டு, உளவியல் யதார்த்தம் (Psychological reality) என்கிறார்.

தேசம் செழித்திடவே
செல்ல மழை பெய்ய வேணும்
செல்ல மழை பெய்திடவே
குளங்களெல்லாம் பெருகிடவே
பெருகி வந்த குளங்களிலே
பெண்களெல்லாம் நீராடி
நீராடி முளை தொளிச்சு
நீலவர்ண பட்டுடுத்தி
சட சடன்னு மழை பொழியச்
சன்னதித் தெரு புரண்டோடச்
சமத்தா நிக்கிற முத்தாளுக்குச்
சரிகை மின்னுவது பாருங்கடி !
கலகலன்னு மழை பேயக்
கல்லும் நீரும் கலந்தோட
கணக்காய் நிக்கிற முத்தாளுக்கு
கல்லோலை மின்னுது பாருங்கடி !
மொடுமொடுன்னு மழை பேய
முச்சந்தி நீரும் பாய்ந்தோட
முடுக்காய் நிக்கிற முத்தாளுக்கு
மூருகு மின்னுது பாருங்கடி !"

(ஏ.எ.க.,ப.47).

மழைப்பாடலின் இறுதியில் மழை பொழிவது போலவும், மக்கள் எல்லாம் இன்பத் திளைப்பில் நீந்துவது போலவும் அமைந்துள்ளது. இந்தப்பாடல்கள் மழையைக் கொண்டுவரப் போவதில்லை. எனினும் இவற்றுக்குரிய சாதக மதிப்பை மறுப்பதற்கில்லை. கோடை கால வறட்சி என்பது மிக நீண்ட காலத்துக்கு இருக்கக் கூடியதும் மோசமான விளைவுகளை உள்ளடக்கியதுமாகும். பாடலில் மழை பொழிவதாகக் காட்டப்படுவதும், பூமி வெள்ளத்தால் நனைவதாகவும், மக்கள் இன்பத்திளைப்பில் நீந்துவதாகவும் காட்டப்படுவதுவும் உண்மையும் பொருளியல் யதார்த்தமாக இல்லையெனினும் உளவியல் யதார்த்தமாக இருக்கிறது. எனவே, இந்தப்பாடல் விவசாயிகளுக்கு நம்பிக்கை அளிக்கின்றது. இயற்கைக் கையின் கொடுமைக்கு ஆற்றாமல் துணையின்றி தவிக்கும் மக்களுக்கு அத் தவிப்பைப் போக்கப் பயன் படுகின்றது.

"ஊசி போல மின்னி மின்னி
ஊர் செழிக்கப் பேயு மழை
காசு போல மின்னி மின்னி
காடு செழிக்கப் பேயு மழை
பணத்தைப் போல மின்னி மின்னி
பட்டணமெல்லாம் பேயு மழை"

(ஏ. எ. க., ப. 52).

என்றும் பாடி மகிழ்கின்றனர்.

## பழமொழிகளில் உணர்வுத்திறனும் உணர் வொதுக்கமும்

'கூரை ஏறி கோழி பிடிக்காதவன்
வானத்தில் ஏறி வைகுண்டம் போகமாட்டான்'

இது ஒரு பழமொழி. சிறிய, எளிதான, சிக்கல் இல்லாத வேலையைச் செய்ய முடியாதவன் பெரிய, கடினமான சிக்கலுடைய காரியங்களைச் செய்யமாட்டார்கள் என்பது இதன் கரு. இதனை இவர்கள் தங்களின் சமுதாயத்தில் செய்யும் தொழில் சார்ந்து வெளிப்படுத்தப்படுகின்றது.

மேற்கண்ட கருப்பொருளையும் கருப்பொருளைத் தாங்கி வெளிவந்துள்ள பழமொழிகளின் தொடர் அமைப்பினையும் உற்று நோக்கினால் கற்பனைத்திறன், சிந்தனை வளம், பிரச்சனைகளைப் புரிந்து கொள்ளும் விதம் அனுபவங்களைப் பழமொழிகளாக்கும் விதம் போன்ற மனவளம் பொதுவானது என்பதுவும் அனைவருக்கும் உணர்வுத்திறன் (cognitive skills) உண்டு என்பதுவும் நன்கு தெளிவாகும். என்பார் க. மகாலிங்கம். (நா.ஆ.கோ. I, ப. 515).

உலகம் இன்பமும் துன்பமும் கலந்தது. துன்பச் சூழலை மறுக்கவும் ஒடுக்கவும் உள்ளம் விழைகின்றது. அது இயலாது போகுமானால் உள்ளம் துன்பத்திற்குக் காரணமாக அனுபவத்தையும் துன்பத்தின் விளைவாகிய உணர்ச்சியையும் பிரித்து கொள்கிறது. தன்னால் மாற்ற இயலாத துன்ப அனுபவத்தை மட்டும் ஏற்றுக் கொண்டு அதனோடு இயைந்த துன்ப உணர்வுகளில் இருந்து உள்ளம் ஒதுக்கம் பெறும் நிலை தோன்றுகின்றது. தன்னில் மனத்தின் உள் துடிப்பினைச் சார்ந்த கருத்தையும் அதற்கேற்ற உணர்வினையும் தன்னியக்கமாகவும் தன்னியல்பாகவும்

பிரித்தலையும் அதனால் அக்கருத்தும் அதற்கு இணையான உணர்வு மட்டும் அறிநிலைக்கு வர அனுமதித்தலையும் உணர்வொதுக்கம் (Isolation of affect) என உளவியலார் கூறுவர் என்பார் து. சிவராஜ். (நா.ஆ.கோ.I, ப. 525).

"தலைக்கு மேலே வெள்ளம் போனால்
சாண் என்ன முழம் என்ன ?"

என்பது பழமொழி. வெள்ளத்தை ஒதுக்க முடியாதபோது உள்ளம் வெள்ளம் பற்றிய அச்ச உணர்வை ஒதுக்க முயல்கிறது. இதில் வெள்ளமும் வெள்ளம் பற்றிய அச்ச உணர்வும் பிரிக்கப் படுகின்றன. அதனால்தான் வெள்ளம் பற்றிய அச்ச உணர்வை ஒதுக்கி அதனைப் பற்றிப் பேச முடிகிறது.

"சாகத் துணிந்தால்
சமுத்திரம் முழங்கால் மட்டம்"

"அணை கடந்த வெள்ளம்
அழுதாலும் வராது"

"எழுதியவிதி அழுதால் தீருமா ?"

"இராமன் ஆண்டாலென்ன
இராவணன் ஆண்டாலென்ன"

இவ்வாறு பல பழமொழிகள் உள்ளன.

சில சமயம் இவ்வொதுக்கநிலை போலியான ஆறுதலைத் தருகின்றது.

"கீழே விழுந்தாலும்
மீசையில் மண் ஒட்டவில்லை"

என்று ஆறுதல்படுகிறான். இதில், கீழே விழுந்துவிட்ட உண்மையை மறுக்கவோ மறைக்கவோ முடியவில்லை. ஆயினும் மீசையில் மண் ஒட்டவில்லை எனத் துன்பச் சூழலில் ஒரு தற்காலிகமான உண்மையற்ற ஆறுதலைக் காணும் எதிர்வினை அமைப்பாகிய (Reaction Formation) உளவியலைக் காணலாம். நிகழ்ச்சியோடு தொடர்புடைய உணர்வின் ஈடுபாடு குறைந்த உள்ள நிலையைக்காட்டும் முயற்சிகளும் உண்டு. இவ்வாறு துன்புறுத்தும் நிகழ்ச்சிகளில் உணர்வின் ஈடுப்பாட்டைக் குறைத்துக் கொள்ளுதலை உணர்வுக் காப்பீடு (Emotional Insulor) என்று உளவியலாளர் கூறுவர்.

"முழுக்க நனைந்த பிறகு
முக்காடு எதற்கு?"

என்ற பழமொழி இத்தகையது. இதில் உணர்வின் ஈடுபாடு குறைவதால், கவலை தணிந்து உள்ளத்திற்கு ஒரு தற்காப்பு அமைப்பு உருவாகி விடுகிறது.

விரும்பியது கிடைக்காவிட்டால், அத்தோல்வியின் உணர்வைக் குறைத்துக் கொள்ளும் போக்கில் அது இல்லாவிட்டால் இது என்னும் மனநிலை உருவாகிவிடுகிறது. இவ்வாறு மாற்று முயற்சிகளில் ஈடுபடுவதை மாற்றுப் பொருளால் ஆறுதல் தேடும் (Substitution) உளவியல் ஆகும்.

"இந்த மடம் இல்லா விட்டால்
சந்த மடம் இருக்கவே இருக்கு"

என்ற பழமொழி இவ்வுண்மையைக் காட்டும். இது தோல்வியின் கூர்மையைக் குறைக்கும்; மாற்று முயற்சிக்கான மனவலிமையைத் தரும்.

## விடுகதைகளில் படைப்பாற்றல்

விடுகதைகள் பெரியவர்களுக்குறியதாகவும் விளங்கி வருகின்றன. அவர்களின் அறிவுக் கூர்மைக்குச் சோதனையாக விளங்குகின்றன. போட்டி மனப்பான்மையையும் அதில் வென்றால் அடையும் உயர்வு மனப்பான்மையும் வளர்க்கின்றன. அதனால் திருமண விடுகதைகள் தோன்றின; மரண விடுகதைகளையும் இத்துடன் சேர்க்கலாம்.

யங், மனிதனின் புராணவியல் படைப்பு மனத்திற்கு (Myth making mind) கனவுகளே அடிப்படையாக அமைகின்றன என்றும் அவை, புராணங்களாகவும் விடுகதைகளாகவும் வெளிப்படுகின்றன என்றும் கூறியுள்ளார்.

பிரேசரும் கனவுகளின் தோற்ற நிலைகளை விடுகதையோடு இணைத்துப் பேசுகின்றார். கனவுகளுக்கும் விடுகதைக்கும் இடையே காணப்படும் வேறுபாடு என்னவெனில் முன்னது குறியீட்டையும் பின்னது உருவகத்தையும் அடிப்படையாகக் கொண்டு நிற்கின்றன. விடுகதைகள் மன உணர்வுகளுக்குள் அடங்கும் செயற்கையான இலக்கிய பகுதியாகும். ஆனால் கனவோ மன உணர்வுகளின் முழு முயற்சிக்கும் அப்பாற்பட்ட தன்மை பெற்றதாகும்.

தொழில் விடுகதைகள் (Work Riddle) பழங்கால மக்களிடையே களைப்பினைப் போக்கும் சமய சஞ்சீவிகளாகக் கையாளப்பட்டன. பொழுது போக்கு விடுகதைகள் (Recreative Riddle) மனதுக்கு உற்சாகம் தரத்தக்கவை. இவற்றில் கோரிக்கை பண்பு இருக்கும். இரவின் முற்பகுதியில் எழுத்தறிவற்ற கிராமப்புற மக்களும் குழந்தைகளும் தனைக் கூறி மகிழ்வர்.

பொதுவாக விடுகதைகள் மனிதர்களிடமுள்ள படைப்பாற்றலை (Creative Power) வளர்க்கும்.

## கதைகளில் உளவியல் உத்திகள்

நமது மக்களின் படைப்பு, அவர்களது கற்பனை, நியாய உணர்வு, அறிவு நுணுக்கம் இவற்றின் வெளியீடு தனி மனிதர்களின் அற்பத்தனத்தையும், சுயநல ஆசைகளையும் வயிறு வெடிக்கச் சிரிக்கும் படியாகக் கிண்டல் செய்து அங்கத முறையால் வெட்டிச் சாய்க்க சில கதைகள் முயலுகின்றன. நமது தீய குணங்களை வேரறுக்க சிரிப்பையே கருவியாக்குகின்றன இவை.

## தாழ்வு மனப்பான்மை

கருப்பன் என்ற ஒரு அனாதை சிறுவன் பண்ணை வீட்டில் மாடு மேய்த்து, பிழைத்து வந்தான். அவனை 'அடேய் கருப்பையா' என்று கூப்பிட்டவுடன் 'இதோ வந்தேன் எசமான்' என்று ஓடி வந்து பணிவுடன் நிற்பான்.

ஒரு நாள் அவனை அப்படிக் கூப்பிட்டவுடன் சிறிது மெத்தனமாக நடந்து வந்தான். மறுநாள் ரொம்பவும் மெத்தனமாக நடந்து வந்ததுமல்லாமல் பண்ணையாரைப் பார்த்து, "ஏன் கருப்பா கருப்பா என்று கூப்பிட வேண்டும்? கருப்பசாமி என்று கூப்பிடக்கூடாதா?" என்று கேட்டான்.

மறுநாள் அவன் சொன்னபடியே 'ஏ கருப்பசாமி' என்று பண்ணையார் கூப்பிட்டார். அவன் முகத்தை ஒரு படியாக வைத்துக் கொண்டு 'ஏன் கருப்பசாமிபிள்ளை என்று கூப்பிடக் கூடாதா?' என்று கேட்டான்.

நகைச்சுவை ரசனையுள்ள பண்ணையாரும் ஒத்துக் கொண்டார். ஆனாலும் அவன் போக்கில் ஏற்பட்ட மாறுதலை என்ன என்று கண்டுபிடிக்க விரும்பினார். கண்டு பிடித்தும் விட்டார்.

கருப்பன் காட்டில் ஒரு புதையலைக் கண்டுபிடித்து தினமும் அதனைப் பார்த்து மகிழ்கிறான்.

எனவேதான் இந்த மாற்றம். மறுநாள் 'என்ன கருப்புசாமி பிள்ளை' என்று கூப்பிட்டபோது, 'பிள்ளைவாள் என்று கூப்பிட வேண்டும்' என்றான். சாப்பிடுகிற மண்சட்டியை ஒதுக்கி விட்டு 'இலையில்தான் சாப்பிடுவேன்' என்று அடம் பிடித்தான்.

பண்ணையார் மறுநாள் புதையலை அவனுக்குத் தெரியாமல் அப்புறப்படுத்தி விட்டார். புதையல் இல்லாததைக் கண்டு திகைத்துப் போனான். வீட்டிற்குச் சோகமாகத் திரும்பினான்.

பண்ணையாரோ, "என்ன கருப்புசாமிப்பிள்ளைவாள் ?" என்று அழைத்தார்.

அவனோ, "நான் பிள்ளைவாளுமில்லை; ஒரு மண்ணு மில்லே! உங்க பழைய கருப்பனேதான்" என்றானாம், கஞ்சி குடிக்க மண்சட்டியை எடுத்துக்கொண்டே.

(கி.ரா., தாத்தா சொன்ன கதைகள், ப. 100)

பணம், படிப்பு, அழகு, அதிகாரம் முதலியன இன்மை தாழ்வு மனச்சிக்கலை உருவாக்கும். இது தன்னம்பிக்கையை வளர்த்துக் கொள்ளும் பொருட்டு உண்டாகும் இயல்பான உணர்வாகும். ஆனால் அவ்வுணர்வு மனித மனத்தைத் தீவிரமாக ஆட்கொள் கொள்ளும் போது தாழ்வுச் சிக்கலாக மாறி மனப்போராட்டத் தைத் தோற்றுவிக்கும்.

இக்கதையில் அவன் சிக்கலுக்கு ஆளாகாமல் தப்பித்துக் கொள்கிறான்.

## தற்காலிகத் தீர்வுகள்

ஆறு. இராமநாதன் 'ஒட்டிக்க' என்னும் கதையின் சமூக உளவியலை ஆய்ந்து எழுதியுள்ளார். (நாட்டுப்புறக்கதைகள், பக். 17-32).

அக்கதையில் இளைஞனின் ஆசை நிறைவேறாமல் தடை பட்டது. அதற்கு உதவ பண்ணையாரைப் போலவே அவனது மகளும், உறவும், ஊரும் தயாராக இல்லை. அதனால் ஆசையை நிறைவேற்றிக் கொள்ளும் அவனுக்குத் தெரிந்த வழிவகை இப்போது ஒட்டிக் கொள்ளும் மந்திரம் ஒன்றுதான்.

கற்பனையின் ஒரு பிரிவான பகற் கனவின் 'வெற்றி வீரன் வகை' என்றொரு வகை உண்டு. ''வாழ்க்கையின் பிரச்சனை களைச் சந்திக்கின்ற திறனும் மன உறுதியும் இல்லாமல் இருக்கின்றோம் என்ற உணர்வு நமக்கு ஏற்படும் போது, பகற் கனவுகள் தோன்றுகின்றன. உண்மையில் அடைய முடியாத பல குறிக்கோள்கள் இருப்பதாக உணர்கிறோம். இவ்வாறான நிலைமைகளில் மாற்று மன ஆறுதல்களாக இவை அமைகின்றன. உண்மையான தேவைகளையும் தாழ்வுகளையும் ஈடு செய்வதற் குரிய இயக்கமாகப் பகற்கனவு செயல்படுகிறது'' என்பார் ஜி.டி. போவாஸ், (பொது உளவியல், ப.204)

இக்கதையில் மந்திரமும் ஒரு பகற்கனவுதான். இக்கதை பரவியதற்குச் சமுதாய அமைப்பு முதற்காரணமாக இருக்க வேண்டும். ஊழியம் செய்து மணத்தல் (Marriage by Service) என்பது ஒருவகை சமுதாய வழக்கம். அதேநேரத்தில் உழைப் பைச் சுரண்டிக் கொண்டு ஏமாற்றுவதும் சமுதாய நிலைமையாகும். ஏமாந்தவர் எதிர்த்துப் போராட முடியாத நிலையில் மனம் வெதும்புவர். இக்கதை, இத்தகைய எண்ணமுள்ள சமுதாயத் திற்கு ஆறுதலைத் தந்திருக்கும். அதன் காரணமாக இக்கதை வேகமான பரவலைப் பெற்றிருக்கும்.

உளவியலார் கூறும் (ஒன்றிடல்) Empathy உணர்வும் கதைப் பரவலுக்குக் காரணம் எனலாம். கதை தங்களுடைய வாழ்க்கை யோடு நேரடியாகத் தொடர்பு கொள்ளவில்லையானாலும் கூடப் பிறரின் இன்பதுன்பங்களில் பங்கு கொள்ளும் மனித உணர்வு அடிப்படையில் கதையை விரும்பி வரவேற்பர்.

இக்கதை நிலை பெற்றதற்கு, சமுதாய தேவையான மன ஆறுதலைத் தருதல், ஏமாற்றியவனைத் தண்டித்தலை விட நகைச்சுவையாக அவமதித்தல், அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்ற பொதுக் கொள்கையை ஆதரித்தல் போன்றவை காரணங்களாகலாம்.

## கூத்துப் பார்வையாளர்களின் உள இயல்புகள்

அல்லார்டிஸ் நிகோல், பார்வையாளர்களுக்கு, (i) சொந்த மனப்பாங்கு உடைமை (ii) உணர்ச்சிக்கு அடிமையாதல்

(iii) மாயையென்று தெரிந்த போதிலும் நம்புவதற்கு ஒத்துப் போதல், (iv) நம்பிக்கையின் அடிப்படையில் செயல் பாட்டிற் கான வழியைத் தேடாமல் இருத்தல் ஆகிய இயல்புகள் உள்ளன என்கிறார்.

இதில், நான்காவது மன இயல்பை மு. இராமசாமி விளக்கும் போது, "கதையை உண்மை என நம்பினாலும், கதை நிகழ்ச்சி களில் குறுக்கிட்டுச் சிக்கலைத் தீர்க்கச் செயலில் இறங்காத மன நிலையில் நடப்பது கதைதான் என்ற உணர்வில் இருக் கின்றனர்.

கதையின் முடிவுகள்கூட, நம்மால் ஆகக்கூடியது எதுவு மில்லை, எல்லாம் இறுதியில் பரம்பொருள் அருளால் நன்மை யில் முடியும் என்ற நிலையை - மாபெரும் சக்தி வாய்ந்த ஒருவன் வந்து தீமையை அழித்து நலனைத் தருவான் என்ற தன்மையை உண்டாக்கிவிட்டு மனித செயல்பாட்டிற்கான வழியைத் தேட வகை செய்யாதனவாகவே இருக்கின்றன. இந்த நழுவல் மனோ நிலையை மிக மெல்லிதாகச் செய்வது வருகின்றன, என்பார். (தோற்பாவை நிழற்கூத்து, ப. 160)

பொதுவாகக் கிராமத்துப் பெரியவர்களின் கதை கேட்கும் ஆர்வத்தை மனதில் கொண்டு கூத்துக்களில் கதையையும் கூறு கின்றனர்.

இவ்வாறு பொது உளவியல் பகுதிகளில் குழந்தை, கல்வி, சமூகம் ஆகிய துறைகளில் உளவியல் உத்திகள் செயல்படும் திறத்தைக் காணலாம். இனிவரும் காலத்தில், இவ்வுத்திகள் பயன்படுத்தப்பட்டால் குழந்தை வளர்ச்சி, சமூக வளர்ச்சி, கல்வி வளர்ச்சி போன்றவற்றுக்குத் துணை புரியும்.

# பிறழ்வு உளவியல்
## (Abnormal Psychology)

பொதுவாக உளவியலானது மக்களுடைய கருத்துக்கள், உணர்ச்சிகள், செயல்கள் ஆகியன பற்றி ஆராய்கின்றது. ஆனால் பிறழ்வு உளவியலானது பிறழ்ந்த உள்ளமுடைய மக்களுடைய கருத்துக்கள், உணர்ச்சிகள், செயல்கள் ஆகியன பற்றி ஆராயும். நாம் வகுத்துக் கொள்ளும் ஒரு வரையறைக்கு அப்பாற்பட்டதே பிறழ்வு எனப்படும். ஒருவகைப் பண்பாட்டில் பிறழ்வதாகப் பிறழ்வற்றதாகத் தோன்றுவது வேறுவகைப் பண் பாட்டில் பிறழ்வுடையதாகக் காணப்படலாம். அல்லது ஒரே வகை பண்பாட்டிலேயே ஒருவேளையில் பிறழ்வற்றதாகத் தோன்று வது இன்னொரு வேளையில் பிறழ்வுற்றதாகத் தோன்றலாம். சிலர் எவ்வளவு செய்ய முடியுமோ அவ்வளவு செய்யாத பொழுது; அறநெறி கூறும் குறிக்கோளுக்கு இசையாத பொழுது பிறழ்வு என்று சொல்லலாம்.

ஆயினும் பிறழ்வு என்றதும் தவறானது என்று எண்ணிவிட லாகாது. எல்லோரும் ஏற்றுக்கொண்ட எல்லையை மீறுவது என்று மட்டும் பொருள் கொள்ள வேண்டும். பிறழ்வு உளவிய லானது மக்களிடம் காணப்படும் பிறழ்வான செயல்களை ஆராய்ந்து, அவ்வாறு நிகழ்வதற்கான காரணங்களை விளக்கு கின்றது. இதனால் இவற்றை முன்கூட்டியே தடுக்கவும் திருத் தவும் முடியும். அத்துடன் பிறழ்வான உள்ளப் போக்கை ஆராய்ந்து அறிவது சாதாரண உள்ளப்போக்கை அறிந்து கொள் வதற்கும் பெருந்துணை செய்யும்.

பெரும்பாலும் இது மனக் கோளாறுகளையும் நரம்பு கோளாறு களையும் பற்றி ஆராய்கிறது. இது நீண்டகாலமாகப் பிரஞ்சு உளவியல் அறிஞர்களின் ஆராய்ச்சித் தனித்துறையாக இருந்து வந்தது.

ஃப்ராய்டு அடிமனத்தைப் பற்றிய தன்னுடைய ஆய்வுக்கு ஆதாரங்களாகப் புராணக்கதைகள் (Myths), தேவதைக்கதைகள் (Fairy tales)' தடைகள் (Taboos), நகைச்சுவைத் துணுக்குகள் மூடப்பழக்கங்கள்' கனவுகள் முதலியவற்றை, எடுத்துக் கொண் டார்.

நாட்டுப்புற இலக்கியத்தில் உளவியல் முறையில் ஆய்வு செய்வதற்கு உளவியல் பகுப்பாய்வு(Psycho analysis) முறையைப் பல ஆய்வாளர்கள் பயன்படுத்துகின்றனர்.

மனிதனிடத்தில் தொடக்க நிலையிலிருந்து இன்றுவரையிலும் இரண்டு இயல்பூக்கங்கள் படிந்துள்ளன. ஒன்று எதிரெதிர் பால் (Opposite Sex) மீது விருப்பம்; இன்னொன்று சண்டையிடும் உந்துதல். இந்தப் பாலுணர்வும் வன்முறை ஈடுபாடும் மனிதனுக்கு விலங்கு உலகு தந்த கொடைகளாகும். இந்த விதத்தில் மனிதன் விலங்கின் தொடர்ச்சியாக இருக்கிறான். இந்த இரண்டு இயல் பூக்கங்களையும் மனிதன் வெளிப்படுத்துகிறான். ஆனால் இந்த வெளிப்பாட்டு வடிவங்கள் காலத்துக்குக் காலம் மாறுபடுகின்றன. சமூக ஒழுங்கிற்கு ஏற்ப இவையுள்ளன. காலந்தோறும் மாறிய சமூக ஒழுங்கு இதைச் செதுக்கிக்கொண்டே வந்தது. இப்படி மனிதன் தன் இயல்பூக்கங்களை ஒடுக்கும் சமூக அமைப்பில் வாழும்பொழுது அவன் சுதந்திரமாகச் செயல்படவில்லை. தன் காலத்திய சமூக ஒழுக்கங்களுடன் முரண்படுகிறான். தன் இயல் பூக்கங்களைக் கட்டுப்படுத்தி ஒடுக்கினால் நரம்புக் கோளாறு கொண்ட நோயாளி ஆகின்றான். தன் இயல்பூக்கங்களை வெளிப்படுத்தினால் சமூக ஒழுங்கின்படிக் குற்றவாளி ஆகின்றான். எனவே மனிதனுக்கு எப்பொழுதும் நிறைவின்மை ஏற்படுகிறது. பினனர் நிறைவின்மையும் சமூக ஒழுங்குடன் முரண்பாடும் ஏற்படுகின்றன. இந்த நிறைவின்மையே மனித சமூகத்தின் சாதனைக்குரிய காரணமாக அமைகின்றது. பண்பாட்டுணர்ச்சி (Ego) விலங்குணர்ச்சியைப் புதுவேலைக்குத் திசைமாற்றி விடுதலை, பிராய்டு உயர்வழிப்படுத்தல் (Sublimation) என்பார். இதனால் உயர்ந்த கலைகளும், காவியங்களும் உண்டாகின்றன.

பிராய்டுக்கு முன்னரே ஹென்றி பெர்க்சான், எட்வர்ட் ஹான் போன்றோர் நனவிலி மனம் குறித்தும், நீட்சே, சோபன் ஹாவர் போன்றவர்கள் நனவிலி மனத்துக்கும் பாலியல்புக்கும் உரிய தொடர்பையும் ஆய்வுகள் செய்துள்ளனர். ஆனால் பிராய்டு நனவிலி மனக்கோட்பாட்டு உருவாக்கத்தில் முன்னணிப் பங்களிப்பு ஆற்றியுள்ளார்.

சமூக ஒழுங்கமைவுடன் ஒத்துப் போக மனிதனின் இயல்பூக்கங்கள் அவனது நனவிலி மனத்தில் படிந்துள்ளன என்றும் மூளையின் பெரும் பகுதியை இதுவே ஆக்கிரமித்துள்ளது என்றும்

குறிப்பிட்டார். இந்த விருப்பங்கள் நனவு மனதின் மூலம் நடைமுறைகளாக ஆக இயலாத காலங்களில், நனவிலி மனதின் செயல்பாட்டின் மூலம் கனவுகளாக வெளியாகின்றன. இந்தக் கனவுகள் குறியீட்டுப் போர்வையில் வெளியாகின்றன. ஆக, தனிமனிதனின் நிறைவேறாத ஆசைகளே கனவுகள்; கதைகளும் அப்படியே. கதைப்பாடல்களில், பெண்கள் மோகிக்கக் கூடிய குணங்களின் சங்கமமாக அர்ச்சுனனைக் காட்டுதல் ஆண்களும் பெண்களும், பெண்களுக்கு இடையில் எவ்வித நாகரிகக் கட்டுத் தளைகளும் இல்லாமல் பாலியல் குறித்து பேசிக் கொள்வதாகக் காட்டுதல் போன்றவற்றில் உள்ளார்ந்த உளவியல் மகிழ்வு இருந்திருக்கக் கூடும். அல்லது காலம் காலமாக அடக்கப் பட்டு வந்த இனமான பெண் இனத்திற்கு வரலாற்று தேவைகளுள் ஒன்றான நனவிலி மனத்துப் பால் உணர்வு விருப்பத்தின் கலை இலக்கிய வெளிப்பாடாகக் கொள்ளலாம்.

## பாலுணர்வு வடிகால்கள்

பாலுணர்வை மக்கள் தம் இதயத்தில் தேக்கி வைத்து பாலியல் நோயாளியாக மாறுகிற விபத்து ஏற்படலாம். அதனால் அவற்றுக்கான வடிகால்களாக நாட்டுப்புற இலக்கியங்கள் விளங்குகின்றன. அத்துடன் அவை வெளியேறிய ஒருவகை நிம்மதி உணர்வும், பிறதொழில்களில் ஈடுபாடும் இன்பமும் பிறக்கின்றது.

## அம்பாப்பாடலில்

ஒருவன் தான் பரத்தையிடம் பெற்ற காம இன்பத்தை வார்த்தைகளில் வடிக்க முயல்கிறான்.

(நா.தொ.பா., ப. 119). இவ்வாறு உடலுறவு தொடர்பாகப் பாடும் போது பாடுபவர் மட்டுமல்லாமல் கேட்பவர்களும் கிளர்ச்சி அடைகின்றனர். வேலையின் வேகம் கூடுகின்றது.

இப்பாடல்களில் உள்ள உளவியல் பாங்கினை, அ. கனகராசு 4 வகையாகப் பகுக்கிறார். (ப. 131)

(i) மனித உணர்வுகள் எண்ணங்கள் வெளிப்படுகின்றன. இவற்றில் இறை, பால் உணர்வுகள் முக்கியமானவை

(ii) மரபுவழிப் பின்பற்றப்படும் தொழில்கள், பழக்கங்கள், நம்பிக்கைகள் வெளிப்படல்

iii) மனிதர்களின் காதல், வாழ்க்கைப் போராட்டம், பண்பு நலன்கள் எனும் மனித நடத்தைகள் வெளிப்படுகின்றன.

vi) வறுமையின் கொடுமை, கற்பின் பெருமை, தீயவர்களை அழித்து நல்லவர்களை வாழ வைத்தல் போன்ற சமூக உளவியல் கருத்துக்களைப் புராண இதிகாச கருத்துக்கள் வழியில் காணலாம்.

## தெம்மாங்குப் பாடல்களில்

" ஆல மரத்தைப் பாரு
அங்கே போற ஆட்டைப்பாரு
சங்கம் புதையைப் பாரு
சமிஞ்ச பிள்ளை மொலையைப் பாரு"
(பா.ம.பா.,ப.15).

என்று ஆண்மகன் பாடுகிறான். இதில் மார்பைக் குறிப்பிட்டு வெளிப்படையாகக் குறிப்பிடுகிறான்.

" எலந்தை பழுத்திருக்கும்
ஏறி உலுக்கி விட்டா
சித்தாடைக் குள்ளிருக்கும்
செண்டுமல்லி ரெண்டு தாரேன் "
(பா.ம.பா.,ப.17).

என்று பெண்ணே உருவகமாகக் கூறுகிறாள்.

" தங்கக் குடமெடுத்து
தண்ணி கொண்டு போற பெண்ணே
தாகத்தைத் தீர்த்து விட்டால்
தண்ணி எல்லாம் குறைஞ்சிடுமோ ? "
(ப.28)

என்ற பாட்டில் தாகம் என்பது உடலுறவுப் பசியின் உருவகமாகும்.

## கூத்துக்களில்

தோற்பாவை நிழற்கூத்தில் பாலுணர்வைத் தூண்டி விடுகிற முயற்சி சந்தைக் கலைகளுடன் போட்டி போடுகிற நிலையில் இல்லை. கொச்சைகளைப் பயன்படுத்துதல் என்பது நாட்டுப்புறக்

கலைகளின் பொதுவான கூறாகும். இவை, சிறுவர்களை மட்டுமே திருப்தி செய்கின்றன.

இதைச் சிறுவர்களும், சில பெரியவர்களும், ரசித்து மகிழ்கின்றனர்.

இது அவர்களின் உறங்கிக் கொண்டிருக்கும் பாலுணர்வுக்கு தீனியாகும்.

இதுபோலவே கரகாட்டக்காரர்களின் டப்பாங்கூத்து நிகழ்ச்சிகளிலும் பாலுணர்வு வெளிப்படுகிற உரையாடல்களும் ஆட்டங்களும் பாட்டுகளும் உண்டு.

" ஏப் புள்ள வெள்ளையம்மா ? "
" என்ன மச்சான் ? "
" நீ டவுன் பஸ்ஸா ரூட் பஸ்ஸா "
" ஏன் கேட்குற ? "
" டவுன் பஸ்னா கண்டவன் எல்லாம் ஏறுவான்
ரூட் பஸ்னா லிமிட்டா ஏறுவாங்க "

இது இரட்டை அர்த்தமுள்ள பச்சையான உரையாடல்கள்.

" ஏறுனது திருநெல்வேலி
எறங்கினது வள்ளியூரு
பாடுறது அம்மனுக்கு-நாம
அவுக்கிறது ரூமுக்குள்ளே "

என்று பாடவும் செய்வார்கள்.

தெருக் கூத்திலும் இதே நிலைதான் என்பார் அறிவுடை நம்பி. (தமிழகத்தில் தெருக்கூத்து, ப. 250)

இப்படி நிறைய கொச்சைகள், பாலியல் உணர்வைத் தூண்டும் பேச்சுகள் நாட்டுப்புற இலக்கியங்களில் மலிந்துள்ளன.

## நாட்டுப்புறக்கதைகளில்

1) ஒருவன் இன்னொருவனைப் பார்த்து விசாரிக்கும்போது "குழந்தைகள் உனக்குப் பிறந்தது எத்தனை ? " ஊராருக்குப் பிறந்தது எத்தனை ? " என்று கேட்கிறான். ஊராருக்குப் பிறந்தவை என்பதில் ஒருவகை பாலியல் குரூரம் மறைந்திருந்து சுகம் தருகிறது. ஆனால் பெண் குழந்தைகளைக் குறிக்கும் என்று சமாளிக்கும் சந்தோஷமும் அடங்கியுள்ளது.

2) புதிதாக நாட்டாண்மைக்கு வந்த தம்பி, ஒரு இழவு வீட்டில் மனைவியை இழந்த கணவனிடம், "அய்யோ பாவம். ரொம்ப நல்லவள். அவள் உனக்கு மட்டுமா பொண்டாட்டியாக இருந்தாள்? எல்லாத்துக்கும் பெண்டாட்டிதான். எனக்கும் பெண்டாட்டிதான்," என்று கூறும் கதையில் ஒரு வார்த்தை சுகம் அடங்கியிருக்கிறது.

## தூண்டல் சுகம் நாட்டுப்புறக்கதைகளில்

"ஆணும் பெண்ணும் தனியாகக் கூடி மகிழும் காலங்களில் சொல்லிக் கொள்ளும் கதைகள் "இவ்வகையின. இத்தகைய தூண்டல்களை பிராய்டு, மூலம் (Sourse), குறிக்கோள் (Aim) பொருள் (Subject) என மூன்று வகையாகப் பகுப்பார்.

இத்தகையக் கதைகளைக் கி. ராஜநாராயணன் கிளிக்கதைகள் என்பார். "அச்சிலே கொண்டு வரமுடியாதபடி ஆபாசமான கதைகள் தமிழில் வண்டி வண்டியாக உண்டு. நம்முடைய கோயில் சிற்பங்களைப் போலவும் தேர்சிற்பங்களைப் போலவும் நமது ஆசாபாசங்களையும் பண்பாடுகளையும் தெரிவிக்கும் புனிதங்கள்" என்றும் விளக்குவார்.

இத்தகு கதையைச் சொல்லும் ஒரு கணவன் தன் மனைவியிடம் அவள் உணர்ச்சியைத் தூண்டி உறவு கொள்ள உளவியல் உத்தியாகக் கடைப்பிடிக்கலாம்.

இவ்வார்த்தை சுகம் பாலியல் உணர்வின் வடிகாலாகவும் பயன்படும்.

ஆண் பெண் உறுப்புகளை மிகப் பெரிதுபடுத்தி கற்பனை செய்வதில் ஒரு சுகம் காண்பது மனத்தின் இயல்பாகும். அது யதார்த்தத்தில் நிறைவேறாத போது கதைகள் மூலம் நிறைவேற்றிக் கொள்கிறார்கள்.

இது போன்ற கதைகளும் ஏராளம். இவை இளைஞர்கள் மத்தியிலும், வேடிக்கைக்காக வயதானவர்களும் ஒரு பாலியல் வடிகாலுக்காகக் கூறி மகிழ்கின்றனர்.

## பாலுறவு வெளிப்பாடுகள்

## வரைமுறையற்ற புணர்ச்சி

இத்தகைய புணர்ச்சியைத் தொடக்கக்காலத்தில் குழுமனம் உள்ள குழுவில் காணலாம். ஒரு குழுவில் உள்ள ஆண்கள் அந்தக் குழுவில் உள்ள பெண்களை அல்லது வேறு குழுவில்

உள்ள பெண்களை மணந்து கொள்ளுதலாகும். எல்லா ஆண்களுமே புருஷர்களாகவும் எல்லாப் பெண்களுமே பெண் சாதிகளாகவும் இருந்திருப்பர். இதில் தாய், சகோதரி என்ற வேறுபாடுகள் ஆணுக்கு இல்லை. தந்தை, சகோதரன் என்ற வேறுபாடு பெண்ணுக்கு இல்லை. கணவன், சகோதரன் ஆகியோருக்கிடையில் வேறுபாடுகள் காணமுடியாத சமூகத்தின் உறவு நிலைமை இது.

ஆண் பெண் உறவில் மேம்பாட்டு நிலை கருதி நியதிகள் மரபாக்கப்பட்டுள்ளன. எனினும் மரபுகள் மீறப்படும் நிலை உருவாகிறது. இதற்குச் சில உளவியல் காரணங்கள் உள்ளன.

ஆழ்ந்த காதலால் உந்தப்பட்ட ஒருவரிடமே சில வருடங்கள் வரைக்கும் முழுக்கவனத்தையும் இவர்கள் செலுத்தி வரலாம். ஆனால் கொஞ்ச நாளிலோ அல்லது நீண்ட காலமாகியோ பழக்கப்பட்டவர்களிடம் அலுப்பு கொண்டு வேறொருவரிடம் தொடர்பு கொள்வதால் பழைய மன எழுச்சி ஏற்படுமா என்று அவர்கள் ஏங்குகின்றனர். சமூக ஒழுக்க நியதிக்குட்பட்டு அவர்கள் தம்மை உந்தும் தூண்டும் செய்கையைச் செயல்படுத்தாமல் இருக்கலாம். ஆனால் அத்தூண்டுகையே இல்லாமல் அவர்கள் செய்து விட முடியாது.

## தகாப்புணர்ச்சி (Imcest) சிக்கல்

சமுதாயம் தடைசெய்துள்ள உறவுகளுக்கிடையில் பாலுறவோ மணவுறவோ நிகழ்ந்தால் அது தகாப் புணர்ச்சி ஆகும். தகாப் புணர்ச்சி விலக்குடைய உறவுகள் பண்பாட்டிற்குப் பண்பாடு மாறுபட்டாலும் தந்தை - மகள், தாய்-மகன், சகோதரன் -சகோதரி போன்ற மிக நெருங்கிய இரத்த உறவுடையோர் பாலுறவு கொள்வது அனைத்துப் பண்பாட்டிலும் விலக்கப்பட்டுள்ளது பண்டைய எகிப்து நாட்டிலும் மர்குவசாஸ் (Marquesas) சமூகத்திலும் மேலும் சில சமூகங்களிலும் விதிவிலக்காகச் சகோதரர் சகோதரி திருமணம் ஒப்புக் கொள்ளப்படுகிறது.

இதற்கான காரணத்தைச் சிக்மண்ட் பிராய்டு உளப்பகுப்பாய்வுக் கொள்கை (Pyscho analytic Theory) மூலம் விளக்குவர். இரத்த உறவுடையோர் ஒரு குடும்பமாக நெருங்கி வாழும் காலத்தில் அவர்களுக்குள் நனவிலி மனத்தில் ஏற்படும் தகாப் புணர்ச்சி விருப்பங்கள் அக்குடும்பத்தில் உள்ளோரின் எதிர்த்தாக்குதல் உணர்வால் நிறைவேற இயலாமல் போய் விடுகின்றன.

ஒரு மகன் நனவிலி மனதில் தன் தாயின் மீது கொண்டுள்ள பாலுணர்வை நனவு மனதிற்குக் கொண்டு வந்து வெளிப்படுத்த அஞ்சுகிறான். ஏனெனில் அவன் தாயிடம் கொள்ளும் உணர்வு வெளிப்பட்டால் அவன் தந்தையின் பாலுணர்வு உரிமையைக் கைப்பற்றுவதாக அமையும். அதை அவன் தந்தை பொறுத்துக் கொள்ள மாட்டார். எனவே அமுக்கப்பட்ட இவ்வுணர்வு தகாப் புணர்ச்சி விலக்கு ஏற்படக் காரணமாயிற்று. வெஸ்டர் மார்க் என்பவர் வேறு காரணங்களைக் கூற முயல்கிறார். அது, இளம் பருவம் முதல் ஒன்றாயிருத்தல் கொள்கையாகும். இதன்படி, ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அனைவரும் தினந்தோறும் நேருக்கு நேராகப் பார்த்துப் பழகி ஒன்றாக வாழ்வதால் அவர்களிடையே பாலுறவு பற்று ஏற்படாமல் அதில் ஒருவகை விலக்க உணர்வே ஏற்படுகின்றது என்பார். இதற்கு மறுப்பும் வந்தது. பிராய்டின் உளவியல் கொள்கையை மாலினோஸ்கி (Malinowski) யும் ஆதரிக்கிறார்.

டைலர் (Tylor) ஒற்றுமைக் கொள்கை (Co-operation Theory) அல்லது மணவுறவுக் கொள்கை (Alliance Theory) என்று உருவாக்கினார். இதன்படி, குடும்பம் என்னும் குழுவிற்குள் ஒற்றுமை ஏற்பட்டு அதன்மூலம் அச்சமூகம் தொடர்ந்து நிலை பெற்று வாழ மக்கள் அமைத்துக் கொண்ட ஒரு முறையே தகாப்புணர்ச்சி விலக்கு என்பார். எனினும் இதற்குப் போதுமான ஆதாரங்கள் இல்லை என்று விமர்சனமும் வந்தது. இனி சிக்கல் களைக் காண்போம்.

### (i) ஒடிப்பசுச் சிக்கல் (Oedipus Complex)

தாய் மகன் பற்றிய ஒரு கிரேக்க புராணக் கதையைக் கொண்டு இச்சிக்கலை உளவியலார் விளக்குவர். தாய் தன் மகனுடன் கொண்ட தகாத உறவே ஒடிப்பசுச் சிக்கல் என்று கூறப்படுகிறது.

ஈடிபஸ் என்பவன் கிரேக்கப் புராணத்தில் வரும் ஒரு கதா நாயகன். சிறுவயதில் பெற்றோரிடமிருந்து விதியால் பிரித்து விடப்பட்ட இந்தச் சிறுவன், பின்னால் ஒரு நாட்டின் அரசனாகித் தன் தந்தை என்பது தெரியாமலேயே அவனை எதிர்த்துக் கொன்றதுடன் தன் தாய் என்பது தெரியாமலேயே தன் தாயை மோகித்து மணமும் செய்து கொண்டான்.

இந்த இளவரசனின் வரலாறு புராணத்தில் காணப்படும் கற்பனைக் கதையாக இருந்தபோதிலும் பிறந்த ஒவ்வொரு குழந்தையினடத்தும் இந்த மனோபாவம் வேறொரு வடிவத்தில் காணப்படுகின்றது

ஒடிப்பசு (Oedipus) பற்றிய புராணக்கதை, வளரும் குழந்தைகளின் அடக்கி வைக்கப்பட்ட இருண்ட ஆசைகளை வெளியிடும் ஒரு மிகச் சிறந்த எடுத்துக்காட்டு என்று பிராய்டு கருதுகிறார். ஒரு ஆண் குழந்தை தன் தாய்மீது தகாக் காதல் கொள்வதோடு தன் தந்தையைக் கொலை செய்வதாகவும் கனவு காண்கிறது. உளவியல் ஆய்வு முறைகொண்டு நாட்டுப்புற வழக்காறுகளைப் பிற்காலத்தில் ஆய்ந்த ஆய்வுகள் எல்லாம் இந்தக் கதையின் அடிப்படையிலேயே அமைந்திருந்தன.

இந்தக் கதை மிக வெளிப்படையாகவே பாலியல் உணர்வை வெளியிட்டுவிடுகிறது என்பார் ஆபிரகாம். பெரும்பாலும் இவ்வளவு வெளிப்படையாகப் பாலியல் உணர்வு வெளியிடப்படுவதில்லை. அடிமனத்தின் (Libidinous-Id) வெறித்தனமான ஆசைகளுக்கு மேல்மனம் (Seyzer-ego) ஒரு தடையாக நிற்கும். அவற்றைக் கனவுகளிலும் புராணக் கதைகளிலும் குறியீட்டுப் போர்வைகளில் வெளியிடுகின்றனர்.

ஒடிப்பசு மனப்பாங்கு (Oedipus Complex) மேற்கத்திய பண்பாடுகள் தவிர்த்த ஏனைய பண்பாடுகளில் வெறும் பாலியல் உணர்வு அடிப்படையில் மட்டுமின்றிக் குடும்ப அமைப்பையும் இனக் குழுக்களால் எடுத்துரைக்கப்படும் செய்திகளையும் சார்ந்ததாகும் என்பர் சிலர். தாய் மகன் மீது அதிக அன்பு காட்டுவதால் ஏற்படும் பொறாமை உணர்வு தனக்குரிய அன்பு தன் மகனுக்குப் போய் விடுமோ என்று தந்தை அஞ்சும் அச்ச உணர்வு போன்றவை பிராய்டிசத்தின் எல்லைக்கு உட்படாதவை என்பார் ஹெர்கோ வைட்சு.

ஓசியானியா (Oceania) என்னும் பகுதியில் வாழும் மக்களின் ஒடிப்பசு மனப்பாங்குக் கதைகள் (Oedipus type tales) தொகுக்கப்பட்டு, வில்லியம் லீசா (William Lessa) என்பவரால் ஆராயப்பட்டன. இத்தகைய கதைகள் இத்தகைய பண்பாடுகள் உருவாக வாய்ப்பே இல்லாத சமூகங்களிலும் கூட வழங்கி வருவதைச் சுட்டிக் காட்டியுள்ளார். ஆப்பிரிக்கா, சீனா, வட அமெரிக்கா,

தென் அமெரிக்கா, ஆசியாவின் பெரும்பகுதி, ஆஸ்திரேலியா, போன்ற பகுதிகளில் இக்கதைகள் வழங்கவில்லை. எனவே ஓடிப்பசு மனப்பாங்குக் கதை பாலுணர்வான உலகப் பொது வுணர்வை அடிப்படையாகக் கொண்டு எழுந்தது என்று கூற முடியாது. அவ்வாறு கூறுவதைவிட இத்தகு மனப்பாங்கு உருவாகக்கூடிய சமூக அமைப்பு இருந்த ஐரோப்பிய பகுதிகளில் முதலில் தோன்றிப் பின்னர் பிற பகுதிகளில் ஊடுருவிப் பரவின எனலாம். (தே லூர்து., நா. வ. ஓ., ப. 44)

மேலை நாட்டினர், மக்களிடையே வழங்கும் இழிவுணர்ச்சி சார்ந்த கதைகளையும், நகைச்சுவை துணுக்குகளையும் எடுத்து ஆய்வு செய்கின்றனர். 'கீழ்த் தரமான நகைச்சுவைகளின் அடிப் படைக் கோட்பாடு-பாலியல் நகைச்சுவையில் ஓர் ஆய்வு'' ( Rationale of the Dirty Joke, an Analysis of Sexual Humour) என்ற நூலைக் கெர்சான் லெக்மான் (Gersbon Leg man) என்பவர் எழுதியுள்ளார். இவர் இழிபொருள் இலக்கியத் துறையில் (Pornographic Literature) ஈடிணையற்றவராகக் கருதப்படு கின்றார். (நா வ.ஜ., ப. 46).

இத்தாலி மன்னன் நீரோ தன் தாயுடனும் காரகல்லா அவனது வளர்ப்புத் தாயுடனும் பாலுறவு கொண்டதாகச் செய்திகள் உள்ளன.

தமிழ்ப் புராணக் கதைகளிலும் ஓடிப்பசு சிக்கலைக் காண இயலும்.

தாயைப் போலவே மனைவி வேண்டும் என்று பிள்ளையார் கேட்கிறார். அதனால் அவரை ஆற்றங்கரைகளில் அரச மரத்தடி யில் உட்கார வைத்து விட்டனர்.

அவரும் அங்கு வரும் போகும் பெண்களுக்குள் தேடிப்பார்க் கிறார். இன்னும் தாயைப் போல பெண் கிடைக்காததால் பிரம்பச்சாரியாக இருக்கிறார் என்பது புராணக்கதை.

பெரிய புராணத்திலும் ஒரு கதை.

ஒரு அந்தணன் தந்தையைக் கொன்று விட்டு தாயைப் புணர முயல்கிறான். ஊர்மக்கள் அவனை அடித்து வெளியே துரத்து கிறார்கள்.

ஒருத்தி கிழவனுக்கு இரண்டாந்தாரமாக வாழ்க்கைப் பட்டாள். அவனால் அவள் சுகம் பெறவில்லை. அவளது பார்வை மூத்தாள் மகன்மீது விழுந்தது அவனோ தாயென்று மறுத்து விடுகிறான். அவள் விடுவதாக இல்லை.

“ அப்பா நான் ஒன்ன
பத்துமாசம் சொமக்கவில்ல
பாலூட்டி வளர்த்த தாயுமல்ல
காமபித்து தடுமாறி விட்டால்
சத்தியமா நீ வாராவிட்டால்
பாரும் பழி தேரும் ”

“ அம்மா இந்த அற்பமான காரியத்தில்
எப்படி மனந்துணிவேன்
நில்லும் பதில் சொல்லும் அம்மா ”

என்ற பாடல் ஒரு தாய்-மகன் முறை உள்ளவர்களின் உளச்சிக்கலைக் காட்டுகிறது.

## எதிர்மறைச் சிக்கல்
(Electra Complex)

ஒரு பெண் தன் தாயை வெறுத்துத் தன் தந்தையிடம் கொண்டுள்ள பேரன்பை உளவியலார் எலக்ட்ரா சிக்கல் என்பர்.

சினிராஸ் (Cinyras) தன் மகள் மைர்யா (Myrrah) வுடன் பாலுறவு கொண்டதாகத் தெரிகிறது.

பிரமன் கலைமகளைப் படைத்ததும் அவளையே மணந்து கொண்டான் என்பது ஒரு புராணக்கதை. இது, ஒரு தந்தை மகளோடு பாலுறவு கொள்வது போன்றது தான்.

இராவணனின் மகள் சீதையென்றும், அவள் பிறந்ததும் சோதிடர் இவளால் இலங்கை அழியும் எனக்கூற, அவன் தன் மகளைப் பெட்டியில் வைத்து கடலில் போட்டான் அவள் ஜனகனால் வளர்க்கப்பட்டாள். அவள்மீது இராவணன் கொண்ட பாலியல் ஆசையால் அவளைத் தூக்கிச் சென்று இராமனால் அழிந்தான் என்பதும் ஒரு கதையாகும்.

“ காமத்துக்குப் பெத்தமகளும் இல்லை
செத்ததாயும் இல்ல ”.

" அப்பனோட போறவளுக்கு
அண்ணன்ஏது தம்பி ஏது "

" கெட்டது கெட்டுப் போச்சு
கிட்டப் படுடி மகளேன்னு சொன்னாப்ல "

" சீதைக்கு இராமன் சித்தப்பன் "

போன்றவை ஒடிப்பசு பழமொழிகள்.

ஒரு ஸ்பானிஷ் விடுகதையில்-

" முன்பு மகளாக இருந்தேன்
இப்போது தாயாக உள்ளேன்
நான் பெற்றிருக்கும் மகனோ
என் தாயின் கணவன்
அரசனே
இந்த விடுகதையை விடுவி
இல்லையேல்
என் தந்தையை விடுவி " (கா.வி.,ப. 10)

சிறையில் அடைக்கப்பட்ட தந்தை பசியால் சாகும் நிலையில் இருந்தார். அவரது மகளோ சிறைப் பொந்தின் வழியாக நுழைந்து, தந்தையின் நிலையறிந்து, பிள்ளை பெற்ற அவள், தந்தைக்குப் பாலூட்டுகிறாள். அவனும் பிழைத்துக் கொள்ள, பிடிப்பட்ட அவள், அரசனிடம் விடுகதை போடுகிறாள். விடுவிக்க முடியாத அரசன் அவளையும் அவள் தந்தையையும் விடுதலை செய்கிறான்.

இதில், ஒடிபஸ் காம்ப்ளக்ஸும் எலக்ட்ரா காம்ளக்ஸும் கலந்த உணர்வு உள்ளது

'காமத்திற்குக் கண் உண்டோ?' என்ற நாட்டுப்புறக் கதையில் காம உணர்வோடு தன் மகளைப் புணர இருந்த கணவனை மறித்து, அவனோடு அவன் மனைவி உடலுறவு கொள்கிறாள். (சத்தியமூர்த்தி, தமிழ்நாட்டுப்புறக் கதைகள் ஆய்வேடு, 1984).

ஒரு காலத்திலே இந்த ஒலகமே பெரளயம் வந்து அழிஞ்சு போச்சு தெரியுமா? பெரளயம்னா இந்த ஒலகமே தண்ணியாப் போச்சு. வானத்துக்கும் பூமிக்கும் ஒரே தண்ணிமயம். எந்த உசுராவது பொளைக்க முடியுமா? அப்பத்தா ஒரு தகப்பனும்

மவளும் ஒரு சொரக்குடுவைக்குள்ளே நொளைஞ்சு தண்ணியிலே மொதந்துக் கிட்டாங்க. எப்படியோ ஒரு காக்காயும் தொத்திக் கிட்டே போயி உள்ள நொளைஞ்சுக் கிட்டு.

அந்த அப்பனும் மவளும் காக்கையும் குடுவையிலேயே இருந் துட்டு தண்ணிவடிஞ்சப்புறம் வெளியே வந்தாங்க. வெளியே வந்து பாத்தா இவங்களைத் தவிர ஒரு பொறப்புமில்லே. காக்காதா அவங்களுக்குக் கொளந்தையாட்டம்.

அவங்கரெண்டு பேரு கனவிலேயும் கடவுளு வந்து இன்னமே இந்த ஒலவத்தைப் பொறப்பிக்கிற பொறுப்பு ஓங்ககிட்டதா இருக்குது நீங்க ரெண்டு பேரும் புருஷனும் பொண்டாட்டியுமா வாழணும்னு சொல்லிட்டார்.

என்ன பண்ணுவாங்க? அப்படியேதா வாழ்ந்தாங்க. வெளிச் சுவற்றில் கிடந்த அவன் கோவணத்திலே தங்கியிருந்த விந்தை அந்தக்காக்கா சாப்பிட, அந்தக்காக்கா சில மாசத்திலே மொட்டை யிட்டு அடப்படுத்துட்டுது. மவளுக்கும் அப்பன் மூலமாக் கொளந்தையும் பொறந்திட்டுது. அப்புறம் அப்பனுக்கு மவ கொளந்தை கொளந்தையாப் பெத்து தள்ளினா. அதுக பெரு சாகி அவர்களுக்குள் குடும்பம் ஏற்பட்டு மேலும் வம்சவிருத்தி ஏற்பட்டது.

(கு. சின்னப்ப பாரதி தாகம்., ப 147).

## உடன்பிறப்பு உறவுச் சிக்கல் (Incest)

ஒரு தாய்மக்களான அண்ணன், தங்கை, அக்கா, தம்பி ஆகிய நெருங்கிய உறவினரிடையே காணப்படும் பாலியல் உறவே இது.

கிளியோபாட்ரா தனது இரண்டு இளைய சகோதரர்களை ஒரு குறிப்பிட்ட கால இடைவெளி கொண்டு மணம் செய்து கொண்டாள். காம்பைசஸ் (Cambyses) மத்தியாஸ் அரசன் (King Mathias), மார்க்கஸ் ஆண்டனியஸ் ஆகியோர் தம்தம் சகோதரிகளுடன் பாலுறவு கொண்டதாகத் தெரிகிறது.

ஒருதாய் தன்பிள்ளைகள் இருவரில் அண்ணனுக்கும் தங் கைக்கும் மணமுடித்து வைக்க விரும்புகிறாள், அண்ணன் மறுக்க வில்லை. அனைத்து ஏற்பாடுகளும் நடக்கையில் தங்கை இதனை

அறிந்து தடுக்க முடியாமல் தற்கொலை செய்து கொள்ள திருமணம் தடைப்படுகிறது. (அ. நா. பெருமாள், வாய்மொழிக் கதைகளில் வாழ்வியல் கூறுகள், ஆ. கோ. III, 1987, ப.482)

இக்கதையில் சமூகம் இத்தகைய உறவுக்கு ஒத்துக் கொள்ள பெண்மட்டும் மறுக்கிறாள்.

இன்னொருக் கதையில், அண்ணனும் தங்கையும் ஈஞ்சி வெட்டக் காட்டிற்குப் போகின்றனர். அவன் அங்கே அவளோடு உடலுறவு கொண்டு விட்டு ஓடி விடுகிறான். அவள் குழந்தைக்குத் தாயாகிறாள். பையன் வளர்ந்ததும் அப்பாவைக் கண்டு பிடித்துத் தாயோடு சேர்ந்து சுண்ணாம்பு களவாயில் வைத்து எரித்து விடுகின்றான். (ஆறு, இராமநாதன், நாட்டுப் புறப்பாடல்களில் தமிழர் வாழ்வியல், ப,100) இத்தகைய உறவுக்குத் தண்டனை வழங்கப்படுகிறது.

1. ஒருவன் தன் தங்கையோடு உடலுறவு கொள்வதற்கு ஆசைப்படுகிறான். இது தங்கை எதிர்பார்க்காதது. அவளால் ஜீரணிக்க முடியவில்லை. அவனுக்கு நெஞ்சு வலி உண்டாகி ஈரல் நடுங்குகிறது. (சத்தியமூர்த்தி, தமிழ் நாட்டுப்புறக் கதைகள், ஆய்வேடு)

2. கடலும் அலையும் எப்படி உண்டாயிற்று என்பதற்கு ஒரு கதை. ஒரு அண்ணன் தன் தங்கையோடு உடலுறவு கொள்ள முயன்றான். அவள் அவனிடமிருந்து தப்பி ஓடினாள். அவனும் துரத்தினான். அவள் ஒரு மரத்தின் மீது ஏறிக்கொண்டு மேலிருந்து, 'திடலும் கடலாகப் போக வேண்டும்' என்று கூறிக்கொண்டு விழுந்தாளாம். அவள் விழுந்த இடம் உடனே கடலும் அலையும் ஆயிற்று. (சத்திய மூர்த்தியின் ஆய்வேடு)

உடன் பிறந்தவர்கள் அல்ல. எனினும் அண்ணன் தங்கை உறவுடையவர்கள்.

"பெண்ணே பெண்ணே என் காதடா
புத்தி கெட்ட அண்ணா புத்தி கெட்ட அண்ணா
பூமாதேவி கண்டுகிட்டா
பொலம்பிடுவா உன்னெ"

(கொ.நா.பா., ப.86).

"வண் பெருங் காற்றடிக்க
வண்ணத் துகில் விலக
கொம்பன் மத யானை
குத்திக் கிழிக்க
அண்ணன் மகனே
அருமை மருமகனே
அதற்குப் பின் என் மகனே
தாலேலோ" (கா.வி.,ப.98)

ஒரு அண்ணன் தங்கச்சிய மொத பிரசவத்துக்காகத் தன்னோட வீட்டுக்கு அழச்சிட்டுவாரான். நல்ல வெயில். வழியில் மரத்தடியில் இளைப்பாறினார்கள். அவள் களைப்பாக இருந்ததால் தூங்கி விட்டாள். அப்போது காத்து அடிச்சி அவ துணி வில கிச்சு. அவன் உணர்ச்சி வசப்பட்டான் அவளும் தெரியாத மாதிரி உடன்படுறா. பின்னால அவ தன்னோட குழந்தைக்கு இவ்வாறு தாலாட்டுப் பாடுகிறாள்.

இதில் திருமணமான தங்கையை உணர்ச்சி வசப்பட்டு கூடுகிறான். அவளும் தெரிந்தே உடன் படுகிறாள்.

"ஐப்பிய மாசத்திலே
ஆடிக் கோடையிலே
வச்சதோர் இளங்கரும்பு
இளங்கரும்பு இருக்க
தலைக் கரும்ப மாடுமேய
தையலர மாடு ஓட்ட
வம்பு பொறக்க
வாட துளுர
அண்ணன் மவன
எனக்கு மருமவன
பிள்ளியும் என் மகன
பேசாம நித்திரை செய்"

(கா. வி., ப. 98).

அண்ணனும் தங்கையும் சின்ன வயதிலே பிரிந்து, வளர்கிறார்கள். அவன் கரும்பு கொல்லையைக் காவல் காக்கும் போது அவன் மாடு மேய்க்க வந்து அவளோடு கூடுகிறான்.

பத்து மாதம் கழித்து குழந்தை பிறக்கிறது. அப்போதுதான் அவன் தன் அண்ணன் என்று தெரியவருகிறது. அவள் தன் நிலையை விடுகதையாக்கித் தாலாட்டுகிறாள்.

இதில் அண்ணனும் தங்கையும் உறவு தெரியாமலேயே உடலுறவு கொள்ளுகின்றனர்.

" காத்துண்ணா கனகாத்து
தோப்புண்ணா கிருஷ்ணகிரி
மதம் புடிச்ச ஆனவந்து
மதமேறி மேஞ்ச தென்னா
கண்ணு செவந்த தென்னா
காந்தாளம் வந்ததென்ன
அண்ணன் மகனே
அறிவுள்ள என் மகனே
முறைமைக்கு மருமகனே
தூங்கடா ஏலணயிலே "

(கா.வி., ப.97)

அண்ணன் தங்கையை அழைத்துக் கொண்டு வீட்டிற்கு வருகிறான். வரும் வழியில் காற்றும் மழையும் அதிகமாக, தோப்பில் தங்குகிறார்கள் அப்போது அண்ணன் தங்கையைக் கற்பழித்து விடுகிறான். அவளும் பத்து மாதம் கழித்து தாயாகிறாள். ஒரு நாள் அவன் தங்கை வீட்டுக்குப் போனதும் அவள் அவனைக் கண்டு இவ்வாறு தாலாட்ட, உண்மை அறிந்து மன உளைச்சலோடு ஓடி விடுகிறான்.

மாமியார் மருமகன் உறவும் பொருத்தமற்றதே
" வேலையத்த மாமியா
மருமகன்கிட்ட போனாளாம் "

என்பது பழமொழி.

எனினும் நாட்டுப்புறப்பாடல்களில் வேடிக்கைக்காக மாமியார் மருமகன் உறவுள்ள பாடல்கள் சொல்லப்படுகின்றன.

அத்தை : மூத்த மகள அனுப்பட்டா
இளைய மகள அனுப்பட்டா
சின்ன மகள அனுப்பட்டா
பெரிய ,, ,,
நடுவ ,, ,,
கடைக்குட்டி மகள அனுப்பட்டா
சொல்லிடுங்க மருமகனே
அண்ணன் மகனே
அன்புடனே சொல்லிடுங்க
கருவாட்டு மண்டையா

மருமகன் : மூத்த மகா வேண்டாமத்த
இளைய ,, ,,
பெரிய ,, ,,
சின்ன ,, ,,
நடுவ ,, ,,
கடக்குட்டி ,, ,,
நீங்க வந்தா போதுமத்த

(தி மா.நா.பா., ப. 464).

இப்படியொரு பாடல்.

சமுதாயத்தில் அரிதாக மருமகள் மாமனார் உறவு மீறப் படுகிறது. இதனால் மருமகள் மாமனாரிடம் அச்சமும் வெறுப் பும் அடைகிறாள் இத்தகைய மனநிலையின் வெளிப்பாடாக நடவுப் பாடல்களில் சில வரிகளைக் காணலாம்.

"ஆரு வரா ரோட்டு மேல
மாமா வாரார் ரோட்டு மேல
ஆமு மாசத்து கேவுரு எடுத்து
ஒன்னு ரெண்டா ஒடையுங்கடி
குடிக்கிறியா மாமமாரே
குத்தட்டுமா கூனு மேல"

(நா.இ.ஆ.,ப.81).

தாத்தா-பேர்த்தி உறவும் தகாததே

"காசிவாசிப் பிராமணரே
பகல்வந்த முறைக்கு
நான் மைத்துனனே
மகனாராகிய மாமனார் கூப்பிடுகிறார்
சாப்பிட வாரும் பாட்டனாரே"

(க.இ., ப. 68)

ஒரு அந்தணர் தன் மனைவியையும் மகனையும் விட்டுவிட்டு காசி யாத்திரை போனார். ரொம்ப காலம் கழித்து திரும்பிய போது ஊரில் மகனும் மனைவியும் இல்லை. நீண்டகாலம் கழிந்த பின் ஒரு பிராமணர் வீட்டுத் திண்ணையில் உட்கார, அவ்வீட்டில் ஒரு பெண்ணை, வசதி இல்லாததால் கிழவனாக இருந்தாலும் மணமுடித்துக் கொடுக்கத் தயாராக இருந்தனர். அப்போது அவ்வீட்டில் இருந்த கிழவி, கிழ அந்தணரைப் பார்த்து தன் கணவன் என்பதையும் அறிந்துகொண்டு பேரன் மூலம் இவ்விடு கதையைச் சொல்லி அனுப்புகிறாள்.

## ஆசிரியர் மாணவி உறவும் அப்படித்தான்

ஆசிரியர்க்கு மாணவி என்பது மகளைப் போன்ற நிலையினள். இது ஒரு வகையில் எலக்ட்ரா சிக்கல்தான்.

ஒரு ராஜகுமாரிக்கு குரு ஒருவர் கல்வி கற்று தந்தார். அவள்மேல் அவருக்கு மோகம் ஏற்பட்டது. தன் ஆசையை அவர் வெளியிட்டார். அவளோ மறுத்தாள். அவளை எப்படியாவது அடைய வேண்டும் எனத் துடித்தார் அவளது ஜாதகம் சரியில்லை என்றும் அவளால் அரண்மனை அழியும் என்றும் பொய் கூறி அவளைப் பெட்டியில் அடைத்து ஆற்றில் போடுமாறு கூறினார். அரசனும் அவ்வாறு செய்தான். வழியில் வேட்டைக்கு வந்த ராஜகுமாரன் அவளைக் காப்பாற்றி அதனுள் புலியை அடைத்து விட்டான். குரு, அப்பெட்டிக்காக அடுத்த ஊரில் காத்திருந்து பிடித்து திறந்தார். புலியோ அவரை அடித்துத் தின்றது.

மாணவி மீதுள்ள உறவுச் சிக்கலுக்கு மரணமே தண்டனை.

## ஆசிரியர் மனைவி-மாணவன் உறவும் விலக்க வேண்டியவை

இதுவும் தகாப்புணர்ச்சிகளுள் ஒன்று.

ஆசிரியர் மனைவி தாய்க்குச் சமம். இதில் ஒடிப்பசு சிக்கலும் ஒளிந்திருக்கிறது.

சந்திரன் குரு பத்தினியான தாரையோடு உடலுறவு கொண்டதாகப் புராணக் கதை கூறும்.

மோகப்பேய் என்கிற கதையில் குரு பத்தினி காலருத்ரி மாணவன் ஒருவன் மீது மோகம் கொள்கிறாள். இவ்வுறவுக்கு மறுத்த மாணவன் மீது வீண்பழி சுமத்தி அவனைத் தாக்குகின்றாள். மீண்டும் ஒரு முறை அவனைச் சந்தையில் கண்டு மோகமுறுகிறாள். அவனோ அவளைத் தாயாக எண்ணித் தவிக்கின்றான். (சிரஞ்சீவி, கதைக்கடல், ப. 287).

## பலதார முறை

தொழில் பாடல்களில் கள்ளக் காதல்கள் பரவலாகப் பேசப்படுகின்றன. ஆணோ பெண்ணோ கள்ளக் காதல் கொள்வது நாட்டுப்புறக் கீழ்மக்களிடம் பெரிய தண்டனைக்குரிய குற்ற

மாகத் தோன்றவில்லை; சிறு தவறாகவே எடுத்துக் கொள்ளு கின்றனர். சில நேரங்களில் இதனை நியாயப்படுத்தவும் முனை கின்றனர். எனினும் எதிர்பாலார் வேதனைப் படுகின்றனர்; இவ் வேதனை பாடல்களிலும் வடியத் தொடங்குகின்றது.

ஊரு நல்லா பொண்ண உறங்கட்டண்டி—
ஏலம்மே ஏலம்
உறங்கட்டண்டி-ஏல சிங்காரம்
ஓ...புருஷபொண்ண தூங்கட்டண்டி
ஏலம்மே ஏலம்
தூங்கட்டண்டி-ஏல சிங்காரம்
கள்ளலையும் பொண்ண திறந்துவைய—
ஏலம்மே ஏலம்
சமுக்காளத்த பொண்ண போட்டுவைய
ஏலம்மே ஏலம்
சாரப்பாம்பு பொண்ண ரூபம் கொண்டு—
ஏலம்மே ஏலம்
ரூபம் கொண்டு-ஏல சிங்காரம்
சாமத்தில பொண்ண இங்க வந்துடுற—
ஏலம்மே ஏலம் ''
(நா.தொ.பா., ப.16).

இவ்வாறு ஒரு பெண்ணின் மன உளைச்சல் பாடலின் பொருளா கிறது.

## கதைப் பாடல்களில்

கதைப் பாடல்களில் அர்ச்சுனன் பெண்களின் பால் உணர்வு விருப்பத்தை நிறைவேற்றும் வகை மாதிரிப் பாத்திரமாக வருகின் றான். அர்ச்சுனன் பல பெண்களை விரும்புவது போலவே பல பெண்களும் அர்ச்சுனனை விரும்புகின்றனர். பாஞ்சாலி, சுபத் திரை, நாககன்னி, போகவதி, மின்னொளியாள், அல்லி, பவளக் கொடி போன்றவர்கள் முக்கியமானவர்கள். இவர்கள் அர்ச்சு னனின் அழகைக் கண்டு மோகிப்பது மட்டுமல்ல மூர்ச்சையும் அடைகின்றனர். அவனது தலைமுடியை அவிழ்த்து அல்லி முடித்து விடுகிறாள். பாஞ்சாலியோடு சேர்ந்து அவனுக்குக் குறித்தி வேடமும் அணிவிக்கிறாள். இது பாலுணர்வு வெளிப் பாடாக உள்ளது. இதுபோலவே, அர்ச்சுனன் மின்னொளி யாளைக் குளிப்பாட்டி ஆடை அணிகள் அணிவிப்பதும் உள்ளது.

இவை கேட்போரின் பாலுணர்வையும் தூண்ட வல்லவை. செயல்கள் மட்டுமல்லாமல்,

> " எங்களிட காரியத்தை நிறைவேற்றப் போகிறீரோ
> நீரே அகப்படுவீர் நேரிழையாள் வீடுசென்றால் "

என்று அல்லியும்,

> " எத்தேச காலமும் இதுவே தொழில்தானோ "

என்று புணர்ச்சிக்குப்பின் பவளக்கொடியும் பச்சையாகவே பேசுகின்றனர்.

அர்ச்சுனன் பலதார மணம் கொள்வதை ஆதரிக்கும் கதைப் பாடல், துரியோதனனின் பிறன்மனை விழைதலைக் கண்டிக்கிறது; தண்டிக்கிறது. மணமான கணவன் மணமாகாத பெண் மீது இச்சை கொள்வதை அனுமதிப்பதையும், மணமான கணவன் மணமான பிறன் மனைவியை இச்சிப்பதைக் குற்றமாகக் கருதுவதையும் இதனால் அறியலாம்.

மதுரை வீரன், முத்துப்பட்டன் போன்றவர்கள் ஒரு ஆடவன் பல பெண்களுடன் உடலுறவு கொள்வதை அனுமதிக்கிற கதாநாயக்கர்கள். இவை, இரு பாலாருக்கும் உளவியல் மகிழ்வைக் கொடுக்கின்றன. ஆண்களுக்குச் சமூக யதார்த்தத்தின் கலைப் பிம்பமாகவும் பெண்களுக்குச் சமூக யதார்த்தத்தின் மீறலாகவும் உளவியல் மகிழ்ச்சியைத் தருகின்றன.

## விலைமகள் உறவு பலதார முறையின் ஓர் அமைப்பு

> " கிளியாட்டப் பெண்டாட்டி இருந்தாலும்
> குரங்காட்ட ஒரு கூத்தியா வேணும் "

என்பது பழமொழி. இது ஆண்மக்களின் பாலியல் ஆசையைக் காட்டும்.

> " *சீல எடுத்துடுத்தி*
> *சிறுநகை மேலணுஞ்சி - நா*
> *சீரங்கம் போய்ட்டாச்*
> *சீரங்கத்து தேவடியாள்*
> *சீல கொறெச்செலும்பா*
> *சிறுநாக தொச்சம்பா* "

"குடுகுடு மாங்காயே மடியிலே கட்டி
கூத்தியா வூட்டுக்குப் போகையிலே
சந்தனக் கட்டல்லே சாயம்பா கூத்தியா
குங்குமக் கட்டல்லே குக்கும்பா கூத்தியா"
(கொ.நா.பா., ப.84,85).

என்று பெண்கள் பாடல்களில் கண்டிக்கின்றனர்.
ஆனால்,

"தங்கக் குடை பிடிச்சு
தாசிமாரை முன்னவிட்டு - உன் மாமன்
தாசிக்கே விட்ட பணம்-ரெண்டு
தங்கமடம் கட்டலாமே"

என்று பெருமைப்பட்டுக் கொள்கிறாள். தாலாட்டில் உடன் பிறந்தவனின் பரத்தமை உறவைச் சிலாகிப்பதும் கணவனின் பரத்தமை உறவைச் சீறுவதும் பெண்களின் உளவியல் நிலையைக் காட்டும்.

"செட்டி கெட்டால் ரெண்டு வைப்பாட்டி"
"சாண் பிள்ளை யானாலும் ஆண் பிள்ளை"
"கிளி போல பொண்டாட்டி இருந்தாலும்
குரங்கு போல வைப்பாட்டி வேணும்"

போன்ற பழமொழிகள் இதனைக் காட்டும்.

## பல கணவ முறை

"அண்ணன் பெண்டாட்டி அரைப் பெண்டாட்டி
தம்பி பெண்டாட்டி தன் பெண்டாட்டி"
"சேலை கட்டிய மாதரை நம்பாதே"

என்று பழமொழிகள் கூறின.

பாஞ்சாலி பல கணவ முறையில் 'ஐவருக்கும் தேவி அழியாத பத்தினி' என அழைக்கப் படுகின்றாள்.

ஒரு நாட்டுப்புறக்கதை. ஒரு ஊர்ல ஒரு சமீன்தாரு. அவருக்கு ஒரு பையன். அவன் ஒருநா ரெம்ப சந்தோசத்தோட அப்பா கிட்ட போனா. "அப்பா நான் வடக்கத் தெருவில ஒரு பொண்ண பாத்திருக்கேன். அதுதான் அந்தச் சம்மத்தேவரு பொண்ணு"ன்னான். அதுக்கு அவரு அது வேண்டாம்டா. அது உனக்கு தங்கச்சி முறைடா. அவ அம்மா என்னோட இருந்தவா,

என்றார். இதுபோலவே அவர் பல பெண்களை தங்கை முறை யாக்கி விட்டார். அவனோ சோர்ந்து போய் அம்மாவிடம் முறை யிட்டான். அவளோ கவலைப்படாதே. "நீ இந்தப் பெண்களில் யாரை வேண்டுமானாலும் கல்யாணம் செய்துக் கொள்ளலாம். ஏன்னா நீ சமீன்தாருக்கே பெறக்கல" என்றாளாம்.

இவற்றில் பல கணவ முறை சொல்லப்படுகின்றது.

பல கணவ முறையும் பல தார முறையும் மறுக்கப்படுகிற இத்தகைய சோர உறவுகள் உருவாகின்றன. பலதார முறை ஆணாதிக்கக் குணத்தால் ஒருவகையில் நியாயப் படுத்தப் பட்டாலும் பல கணவ முறை அதே காரணத்தாலேயே கண்டிக் கப்படுகிறது.

ஒரு பெண்சோரம் போவதற்குப் பல காரணங்கள் உள. அவற்றுள் ஒன்று கணவனின் இயலாமை. ஆணும் பெண்ணும் உடல் நிலையில் ஒத்தில்லாமல் இருப்பதாகும். பெண் ஆணால் திருப்தி அடையமுடியாத போது, மறு மணத்துக்குச் சமூகம் அனுமதி தராத போது மறைவாக அவள் சோரம் போகிறாள்.

பலதார மணத்தில் கணவனால் சரியாகக் கவனிக்கப்படாத போது, தானிருக்கையில் இன்னொரு பெண்ணை வைத்திருக் கிறானே என்ற கோபத்தில், சோரம் போவதும் உண்டு.

வெளியூர் போன கணவன் பிரிவை நீட்டிக்கும் போது மனைவி சுயக் கட்டுப்பாடில்லாமல் சோரத்தை நாடுகின்றாள்.

நில உரிமைக்காக, முறைப் பெண்களை மணந்து கொண்டு அத்திருமணங்கள் பொருந்தாமல் போவதாலும் சோரம் உரு வாகின்றது. அன்பு கொண்டவனோடு வாழ முடியாத போது, திருமணத்துக்குப் பிறகும் கள்ளக்காதலாகத் தொடருவதுண்டு.

கணவன் ஒழுக்கமற்றவனாக, குடியனாக, காமுகனாக இருப்பினும் பெண் சோரத்தை விரும்புகிறாள்.

குடு குடுத்தான் மேடையிலே
குருடன் கவி பாடயிலே
அருமையான என் கணவன
அருங்கிணத்தில் தள்ளினேனே
கிணத்து முதலையே
சமுத்திரத்து நீர் முதலையே
எங்கணவனை கரையேத்தி விடுவாயே !

வறுகடலை முளைக்கட்டும்
கத்தாழை தோப்பாகட்டும்
வருவாண்டி நம் புருஷன்.

(கா.வி.ப. 59).

ஒருத்தி கணவனோடு பயணம் செய்தாள். வழியில் ஒருவன் இனிமையாகப் பாட, அதில் மயங்கி, கணவனைக் கிணற்றில் தள்ளிவிட்டாள். பாடுகிறவனிடம் ஓடிப்போய்ப் பார்த்தாள். அவனோ குருடனும் நோயாளியுமாயிருந்தான். தவறுக்கு வருந்தி திரும்பி வந்து, கிணற்றடியில் அவள் பாட, முதலை அவளுக்குப் பதில் கூறுகிறது. அவள் அழுதாள்.

இவ்விடுகதையில் அவள் சோரம் போகவில்லை. எனினும் சோரம் போகும் ஆசை அவள் உள்ளத்தில் உள்ளது. அதற்குத் தண்டனையாகக் கணவனை இழக்கிறாள்.

"மண்சாறு பண்ணும்
மதிகேடா என்குயவா
உன்சால் இருகாதம்
கைநீச்சு முக்காதம்
இன்னும் இருகாதம்
இனிநீந்தப் போவதில்லை
நாட்டாற்றில் நிற்கும்
நாணலே கைகொடுப்பாய் !
நாடறிந்த கள்ளிக்கு
நான்தானோ கைகொடுப்பேன்."

(த. நா. பா., ப. 243).

ஒருத்திக் கணவனுக்குத் துரோகம் செய்துவிட்டு ஒரு குயவனுடன் ஆற்றுக்கு அக்கரையில் சோரம் போனாள். இது தொடர, ஒரு நாள் ஆற்றில் அதிக வெள்ளம். குயவன் மண்பானையைக் கொடுத்து மிதந்துபோகும்படிக் கூற, இடைவழியில் மண்பானை சரியாக வேகாததால் கரைய, அவள் நாணலிடம் வேண்டுகிறாள். நாணலோ 'கள்ளிக்குக் கை கொடுக்க மாட்டேன்' என மறுக்க அவள் ஆற்றோடு மடிகிறாள்.

இவ்விடுகதையில் சோரம் போனப் பெண்ணைச் சாகடித்து தண்டனை வழங்குகின்றனர். மனிதர்கள் மட்டுமல்ல நாணலும் கூட இத்தகையவர்களுக்கு இரக்கம் காட்டுவதில்லை.

3) இருளோ இருள்காத்து
ஈருயிரும் ஒருயிராக இருக்கும்போது
மட்சம் வருகுதுண்ணு
மலையோரப் ஓண்டையில
வலையிடுவான் வாசலிலே
அரசர்முடி சாய்ந்தால்
யாரழுது தெண்டம் வைப்பார் ?

(கா.வி.ப.72).

காட்டுல ஒரு வேடுவனும் வேடச்சியும் வாழ்ந்தார்கள். அவளுக்கு ஒரு அரசன்மேல் ஆசை. அத்துடன் தொடர்பு. ஒருநாள் வேடன் வேட்டைக்குப் போக, அவளோ அரசனோடு இன்பமாக இருந்தாள். வேடன் மழைக்காக விரைவில் வீட்டுக்குத் திரும்ப, அரசனைப் பார்த்து விட்டான். வேடன் கத்தியால் அரசனைக் கொல்ல அரசன் பிணமாகிறான். வேடுவச்சி இக்கதையை விடு கதையாகப் புலம்புகிறாள்.

இதில் சோரத்துக்குத் துணைபோன ஆண் மகன் தண்டிக்கப்படுகிறான்.

4) "இழை ஆயிரம் பொன்பெற்ற
இந்திரவர்ணப் பட்டாடையும்
அரசன் அன்பின்முன்
பஞ்சாகப் போனதல்லவோ"
"சந்தனக் கட்டை தனித்தெரியுது
குங்குமச் செட்டி குதியெனடா"
"தேனைக் கரும்பை வெட்டி
சிமிழில் அடைத்து வைத்தேன்
தின்று ருசி கண்ட ராசாவே
நீர் குதியும்"

(க. கா. வி., ப. 50).

ஒரு செட்டியார் மனைவிக்குப் பட்டு வாங்கி வந்தான். அவளோ அன்று இரவு அதைக் கட்டிக் கொண்டு, சுரங்கம் வழியாக அரசனிடம் சோரம் போனாள். அப்போது எண்ணெய் விளக்கில் திரி இல்லாததால் அவள் பட்டில் கிழித்து திரி ஏற்ற அவள் கணவனும் அதைப் பார்க்கிறான். அவன் திரும்பியதும் அவன் விடுகதை கூற, அவள் உண்மை வெளியானதற்காக இறந்து போகிறாள்.

அவளை எரிக்கும்போது அரசன் வந்து நெருப்பில் குதிக்குமாறு செட்டியிடம் கூற, செட்டியோ அரசனைக் குதிக்குமாறு கூற, அரசன் அவமானப்பட்டுக் குதித்து இறக்கிறான்.

இக்கதையில் சோரக் கணவன் தண்டிக்கப்படுகிறான்.

" கறுப்புத் துணி அறிவாள்
கள்ளவழி தானறிவாள்
கணவன் சரியாய் இருந்தால்
கள்ளவழி நடப்பாளோ "

(மு.வை. அரவிந்தன்,
த.நா.பா., ப.178).

என்ற பாடலில் கணவன் சரி இல்லாததால் மனைவி சோரம் போவது குறிப்பிடப்படுகிறது.

ஒரு கணவன் வெளியூர் போக விரும்பினான் அவனுக்கு மனைவி மீது கொஞ்சம் சந்தேகம். அதனால் அவளது அடிவயிற்றில் ஆட்டுக்குட்டியின் ஓவியத்தை வரைந்து விட்டுப் போனான். அவன் போய் பல மாதங்கள் ஆயின. அவளால் உணர்வுகளை அடக்க முடியாமல் ஒருவனோடு கள்ளத் தொடர்பு கொண்டாள். அப்போது ஓவியம் அழிந்து போகவே அவனிடம் ஒரு ஆட்டுக்குட்டி படத்தை வரையுமாறு வேண்டினாள். அவனும் வரைந்து விட்டுப்போனான். ஒரு நாள் அவளது கணவன் திரும்பி வந்தான். ஆட்டுக்குட்டி ஓவியம் இருக்கிறதா என்று பார்த்தான். இருந்தது. ஆனால் ஆட்டுக்குட்டித் தலையில் கொம்பு இருந்தது. அவனுக்குச் சின்ன சந்தேகம். அவளிடம் விசாரித்தான். அவளோ " நீங்கள் போயி எத்தனை மாசம் ஆச்சு. கொம்பு மொளக்காமலா இருக்கும்? " என்று கேட்டாள். அவனும் ' ஆமாம் ஆமாம் ' என்றானாம். இது பிரிவால் வந்த சோரம்.

" ஊரார் உறங்கட்டண்டி—பெண்ணே
உன் புருசன் தூங்கட்டண்டி
நல்லபாம்பு வேசம் கொண்டு—பெண்ணே
நான் வருவேன் சாமத்திலே "

(பா.ம.பா., ப. 40)

என்ற பாடலில் சோரம் சொல்லப்படுகிறது. நல்லபாம்பு என்பது பாலியல் குறியீடாகும்.

## பாலுணர்வுக் குறியீடுகள்

பாலுணர்வு வடிகால் என்கிற நிலை மாறி, குறியீடாக வைத்து கொள்கிற இயல்பும் நாட்டுப்புற இயலில் இருகின்றது.

## கும்மிப் பாடல்களில்

ஊர்க் கவுண்டர் என்பது ஊர்த் தலைவராகும். இவரைப் பாடும் கும்மிகள் இவரை ஒரு பாலுணர்வு குறியீடாகவே எடுத்துக் கொள்கின்றது.

"கொட்டத்துக் கார நாதே கவுண்டருக்கு நம்ம
குறிஞ்சி மெத்தையைப் போடுங்கம்மா"

(மே.த.நா.,ப.258).

மக்கள் வழக்கில் மெத்தையை விரிப்பது என்பது ஒருவரை உடலுறவுக்கு வரவேற்பதைக் குறிக்கும்,

"மூங்க மொளைக்குள்ளே பச்சரிசி
முன்னூறு தேங்காயும் சக்கரையாம்
அள்ளி வெளம்பற ஆண்டிய கவுண்டருக்கு
ஆளுக்கொரு கும்மி போடுங்கம்மா"

"வட்டப் பொட்டுக்கார முத்துக் கவுண்டர்
வார சிங்காரத்தெ பாருங்கம்மா"

"அத்தியங் குச்சியும் பொன்னாலே
ஆவரங் குச்சியும் பொன்னாலே
வேப்பங் குச்சியும் பொன்னாலே அட
அப்படிப்பட்ட நம்ம கவுண்டருக்கு
பல்லுக் குச்சிகள் பொன்னாலே"

(மே.த.நா.,ப.259)

இவற்றில் மூங்கில் குருத்து, பச்சரிசி, தேங்காய், சர்க்கரை, குச்சிகள் போன்றவை ஆண்குறியையும் வட்டப் பொட்டு பெண் குறியையும் குறிப்பன என்பர். இதுபோலவே 'வெள்ளைக் காரன்' என்பதுவும் பாலுணர்வு குறியீடாகவே விளங்குகின்றது.

"சந்தைக்குப் போற தடத்து மேலே
சாதிலிங்க மரத்தடியே
ரெட்ண கம்பிளி விரிச்சுப் போட்டு
நித்திரை செய்யறார் வெள்ளைக்காரன்"

என்று பாட்டில் கம்பிளி விரிப்பும் நித்திரையும் பாலுணர்வு குறிப்பினைக் காட்டும் என்பார் செங்கோவரதராசன்.

## கதைப் பாடல்களில்

அர்ச்சுனன் பாம்பு வடிவம் எடுக்க கிருஷ்ணன் பிடாரனாகி அல்லியிடம் பாம்பை அடைக்கலமாக விட்டுச் செல்கின்றான். அப்போது "இந்தப்பாம்பு என் தங்கையுடன் எல்லா இரவுகளிலும் பிரியாமல் படுக்கும். உன்னிடம் ஓர் இரவு கொடுத்தாலும் பாம்பு எடை குறையும்" என்கின்றான். அல்லியும் அப்பாம்பை விருப்பத்துடன் வாங்கிக் கொள்கின்றாள். இரவில் பாம்பு அவளைப் புணர்கின்றது. காலையில் எடை குறைந்திருப்பது தெரிகிறது இது அல்லி அரசாணி மாலையில் உள்ளது.

இதுபோலவே பவளக் கொடி மாலையில் அர்ச்சுனன் அன்னம் வடிவம் எடுக்கின்றான். கிருஷ்ணன் வேடனாக அன்னத்தைப் பவளக் கொடியிடம் விட்டுச் செல்கிறான். செல்லும்போது "பெண்டுகளென்றால் பிரியமாய் மேல் விழுமே, ஆசையாய் முத்தமிட்டே அணைத்து விளையாடும்" என்கிறான். அதுவும் மூக்கினால் பவளக்கொடியின் மார்பைக் குத்துகிறது, முகத்தோடு அணைத்து முத்தம் கொடுக்கிறது. இவற்றில் உள்ள பாம்பு, அன்னம் போன்றவை எரிக் பிரம் கூறுவது போன்று பாலியல் குறியீடுதான். அல்லி அரசாணி மாலையில் மஞ்சம் குலைதலும், பவளக்கொடி மாலையில் கட்டில் அசைவதும் பாலியல் நிகழ்ச்சிக் குறியீடுகளாகும்.

## விடுகதைகளில்

"உரிச்சி உள்ளாடை கட்டி
திலுப்பி முறுக்கி
கொண்டையில வச்சப் பூ என்ன பூ?"

இது வீடுகதை. இதில் ஒரு கதையும் உள்ளது.

ஒரு ஊர்ல ஒரு ஆம்படையாள் பொண்டாட்டி ரெண்டு பேரும் இருந்தாங்க. அந்தப் பொண்டாட்டி ஒரு பாம்ப கள்ள புருஷனா வச்சிருந்தா. அந்த ஊர்ல இருக்குற கொளத்தாங்கரையில ஒரு அரசமரம் இருந்தது. அந்த அரசமரத்து பொந்துல தான் அந்தப்பாம்பு வாழ்ந்துக்கிட்டு இருந்தது.

ஒருநாளு அந்தப் பாம்ப அடிச்சிக் கொண்ணுட்டாங்க. சேதி தெரிஞ்சதும் அவ அழுது புரண்டா. யாருக்கும் தெரியாம அந்தப் பாம்ப எடுத்து தோல உரிச்சு பாவாடையா கட்டிக்கிட்டா. அது முன்ன எடுத்து முறுக்கி கொண்டையில வச்சிக்கிட்டா. வச்சிக்கிட்டு ஆம்படையாங்காரங்கிட்ட இந்த விடுகதையைப் போட்டா.

சொல்லா விட்டால் சுண்ணாம்பு களவாயில வச்சி சுட்டுடுவண்ணு சொன்னா. அவன் யோசனை பண்ணிப் பார்த்தான். கவலை யோட ஒரு மரத்தடியிலே ஒக்காந்திருந்தான். அப்போ அவன் உக்காந்திருக்கிறது தெரியாம ரெண்டு கிளிங்க நடந்த கதையை எல்லாம் பேசிக்கிட்டு இருந்ததுங்க. அவனும் விஷயம் புரிந்து போனதும் வீட்டுக்குப் போய் விடுகதையைக் கூறி முடிச்சான்.

இவ்விடுகதையில் பாம்பு என்பது ஆண்குறியின் குறியீடாக வந்துள்ளது. இதனால் பாம்போடு தொடர்பு என்பது இன்னொரு ஆணோடு தொடர்பு கொண்டுள்ளான் என்பது பொருள்.

(கா.வி. 76)

## மந்திரப்பாடல்களில்

முதலிலோ இறுதியிலோ ரீம் ரஹீம் ர்ரும் ராஹ்ம் போன்ற ஒலிகளை எழுப்புகின்றனர். இவை உடலின் ஒவ்வொரு உறுப் பையும் குறிக்கின்றன. (கொ.நா.பா., முன்னுரை).

## விளையாட்டில்

அஞ்சாங்கல் விளையாட்டுப் பாடல்,

“வீதியிலே ஜலலோ பொன்னம்மா கல்லுரல
வீசி வீசி ஜலலோ பொன்னம்மா குத்துராளோ”

என்ற பாடலில் உரல், உலக்கை, குத்துதல் போன்ற சொற்கள் பாலுணர்வின் குறியீடுகளாக உள்ளன. பத்து வயதுக்குட்பட்ட குழந்தைகள் விளையாடும் இவ்விளையாட்டு இந்தச் சொற்களின் வாயிலாக மனித உள்ளத்தின் ஆழத்தில் உள்ள பாலுணர்வு ஆவல்களை வெளியிடுவதாகக் கொள்ள வேண்டும். இதில் தோற்றவர்களுக்குத் தண்டனையாக வேடிக்கைத் திருமணம் செய்து வைக்கின்றனர். இதிலும் இப்பாலுணர்வு கூறு உள்ளது.

விளையாட்டுகள் விடுதலையானவை என்பதால், விளை யாட்டுகளின் வாயிலாகப் பிற குறிப்புகள் வெளியிடப்படுகின்றன என்பதோடு பாலுணர்வுக் குறிப்புகளும் நிறைவேறாத ஆவல்களும் கூட வெளியிடப்படுகின்றன” என்பார் செங்கோ வரதராசன். (மே.த.நா., ப. 165).

## கனவுகள்

கனவு என்பது நிறைவேறப்படாத ஆசைகள் அடிமனதில் இருப்பதும், உடலில் மூளை சம்பந்தமான நோயுமே கனவுகள் தோன்றக் காரணம் என்பர்.

பிராய்டு மனதில் மூன்று நிலைகள் இருப்பதாகக் கூறுகின்றார். அவற்றில் முதலாவது புலனறிவு (Conscious). இதுதான் காரண, காரியம் காட்டும் அறிவு பேசுவது, நடப்பது, உணர்வது போன்ற காரியங்கள் இங்கு நடைபெறுகின்றன இரண்டாவது ஆழ்ந்த மன அறிவு (Subconscious) இது பழக்கங்கள், இசை, சுவை, கற்பனை முதலியவற்றிள் பிறப்பிடம். மூன்றாவது பிரபஞ்ச அறிவு (Universal mind) இது எங்கிருக்கிறது என்று மருத்துவ ரீதியில் ஒன்றும் விளங்கவில்லை. ஆனால் இவ்வறிவு பிரபஞ்சத்துடன் தொடர்பு கொண்டு எதிர்காலத்தையும் இறந்த காலத்தையும் அறிகிறது.

நமது லட்சியத்தைப் பற்றி தினமும் புலனறிவின் மூலம் சிந்திப்பதால் அது நாளடைவில் ஆழ்மனதில் பதிந்த எண்ணங்கள் எப்படியோ பிரபஞ்ச அறிவுடன் தொடர்பு கொண்டு காரியங்களை அங்கங்கே அதற்கேற்ப அமைகின்றன என்றும் தெரிகிறது.

மனம் எதை நம்புகிறதோ அது வாழ்வில் உண்மையாக நடைபெறத் துவங்குகிறது. உள்ளுணர்வு நம் கனவாக வெளிப்படுகின்றது.

கனவுகளின் விளக்கம் (Interpretations of dreams) என்ற நூலில் பிராய்டு, குழந்தைப் பருவத்திற்குரிய உள்ளார்ந்த அடக்கி வைக்கப்பட்ட பாலுணர்வுகள் பற்றிய விருப்பம் அச்சம் முதலியவற்றைக் குறியீட்டுப் போர்வையல் கனவுகள் வெளிப்படுத்துகின்றன என்பார். புராணக் கதைகளையும், வேறுவிதமான நாட்டுப்புற வழக்காறுகளையும், கனவுகளுடன் தொடர்புபடுத்திக் காட்டுகின்றார்.

கனவுகளிலும் புராணக்கதைகளிலும் ஒரே வகையான உளவியல் உத்திகளே செயல்படுவதாகக் கொள்ளப்படுகின்றது. கனவுகள் ஒரு தனிமனிதனின் நிறைவேறாத, நிறைவுறாத அடக்கி வைக்கப்பட்ட இளமைப் பருவ ஆசைகளை வெளியிடுவதைப்போல புராணக்கதைகளும் ஓர் இனத்தாரின் நிறைவேறாத அடக்கி வைக்கப்பட்ட ஆசைகளை வெளியிடுகின்றன

சுருக்குதல் (Condensation), விரித்தல் (Elaboration), மாற்றி நிரப்புதல் (Substitution) போன்ற உத்திகள் மூலம் குழந்தைத் தனமான அரைகுறையாக நினைவில் நிற்கிற பாலியல் தூண்டல்கள் (Urges) அன்றாட வாழ்வில் பயன்படும் பொருள்களாகவும், உருவகங்களாகவும் மாற்றி அமைக்கப்படுகின்றன. இந்தக் குறியீடுகளை முறையாகப் புரிந்து கொண்டு, அவற்றைச் செம்மையாகத் தொகுத்துப் பார்த்தால் ஒவ்வொரு புராணக்கதையும் பாலியல் வேட்கையையும் குற்றவுணர்வையும் வெட்கப்படத்தக்கத் தன்மையையும் கொண்ட பாலியல் கதையை உள்ளடக்கிக் கொண்டிருப்பதைக் காணலாம். ஒவ்வொரு புராணக்கதையின் மறைவிலும் சிற்றின்ப தற்பழக்கம் (Masterbation) காயடித்தல், தகாப்புணர்வு போன்ற பாலியல் உணர்வுகள் புதைந்து கிடக்கக் காணலாம்.

## கோவிலன் கதையில் கண்ணகியின் கனவு

"மரப்பெட்டி உடையக் கண்டாள்
மல்லிகைப்பூ வாடக் கண்டாள்
ஏற்றிவைத்த திருவிளக்கு
இருளடைந்து போகக் கண்டாள்
உரைத்து வைத்த சந்தனந்தான்
உலர்ந்து உதிரக் கண்டாள்
தேங்காய் உடையக் கண்டாள்
செம்புஜலங் குறையக் கண்டாள்
அட்டாளுங் சொக்கர் செயல்
அம்மதுரை இடியக் கண்டாள்
மஞ்சன் அழியக் கண்டாள்
மணமழிந்து போகக் கண்டாள்
தாலி பறிபோகக் கண்டாள்
தலைவணங்கே மாளக் கண்டாள்
மாலைப்பறி போகக் கண்டாள்
மணவாளன் மாளக் கண்டாள்
காளியம்மன் கோயிலில்
கண்டதுண்டம் செய்யக் கண்டாள்
குலைவெட்டி சாய்ந்தது போல்
கோவலரும் சாயக் கண்டாள்"

கோவலன் மதுரை செல்வது பற்றி கண்ணகி விநாயகரிடம் ஆருடம் கேட்கிறாள். 'இந்தப் பயணம் எழில் மதுரைப் போவா ரானால் மாண்டு மடிந்திடுவார் வரப் போறதில்லை' என்று கூறு கிறார். இதனால் அவள் ஆழ்மனதில் அச்ச உணர்வு பதிந்து கனவாகத் தோன்றியிருக்கலாம்.

## வீரபாண்டிய கட்டபொம்மன் கதைப்பாடலில் வெள்ளையம்மாவின் கனவு

" வாழைதோப்பும் அழிய கண்டேன்
அய்யோ மல்லிகைப்பூவும் கருகக் கண்டேன்
பாழூராகவே போகக் கண்டேன் இந்தப்
பாஞ்சை நகரம் அழியக் கண்டேன்
கூந்தல் அவிழ்ந்து உலையக் கண்டேன்
அய்யோ கொண்டையில் பூவும் கருகக் கண்டேன்
ஆந்தை அலறி அழுகக் கண்டேன் ஒரு
அநியாயக் கூகை குமுறக் கண்டேன்
கிழக்கோட்டை வாசலிலே அரைக்
கீரைப் பாத்தியான தோட்டத்திலே
வேளையிலே குண்டு தைக்கக் கண்டேன்
அங்கே வீணாக உன் தலை போகக் கண்டேன்

போருக்குப் போகும் கணவன் இறப்பானோ என்ற நியாயமான அச்ச உணர்வே வெள்ளையன் மனைவிக்கும் கனவாகத் தோன்றி யிருக்கலாம்.

## பொம்மக்காவும் திம்மக்காவும் கனவு காணல்

கச்சமாகவல்லோ கண்டகினா கணவனுக்காகாது
பக்கத்திலே ஒளிந்தொருவன் பதுங்கியிருந்திடவும்
அப்புறம் ஓடிவந்தே கணவனைக் குத்திட கண்டேனான்
சக்கரம் போல சுழன்று மன்னவன் தண்ணீர்க்
கரையதிலே
குப்புறவே விழுந்த இடத்தில் குடலும் சரியக் கண்டேன்
மலையில் புலிகளும் நம் மன்னவனுக்குத் துணையாய்
கழுகும் ஒரு நரியும் மன்னவனைக் காத்திடக்
கண்டேனான்
தாலிமடை முறிந்து தெருவினிலே தானே விழுந்திடவும்

வருக்கை பலா முறிந்து மலையில் விழவும் கண்டேன்
குடிசையில் தீப்படவும் கொட்டாரம் வைக்கக்
கண்டேன்

இவர்களுக்கும் கணவனுக்குத் தீங்கு நேருமோ என்ற அச்ச உணர்வே கனவாகத் தோன்றியிருக்கலாம்.

## முத்துப்பட்டனில் கனவு

நித்திரைதனிலே பொல்லாத சொர்ப்பனம்
துர்க்குறியாகவே கண்டானாம்
கருமயிலைகாளை இடைவிட்டோடி
கசத்தில் விழுந்திறய்க்க கண்டானாம்
நேரிட்டு வந்த ஒரு கடுவாயது
கூறிட்டுக் கீறவும் கண்டானாம்
கையிலே கட்டியகாப்புநூல் தன்னை
கறையானரித்திடக் கண்டானாம்
கோழிக் கூட்டுக்குள் விருகு வந்து நல்ல
குஞ்சிப் பெட்டையும் கொள்ளக் கண்டான்
கொண்டையறுத்து மலையிலே தூக்கிக்
கிடக்கக் கண்டான்.

அண்ணன்மாரை எதிர்த்து முத்துப்பட்டன் சக்கிலியப் பெண்களை மணந்து கொண்டான். அவனுக்கு ஏதேனும் தீங்கு நேருமோ என்ற அச்ச உணர்வு ஆழ்நிலையில் படிந்து கனவாக வெளிப்பட்டிருக்கலாம்.

நிகழ்ச்சி உண்மையானால் முடிவு எவ்வாறு இருக்குமோ என அஞ்சுவது தொடர்புள்ள பாத்திரத்தின் இயல்பு நல்ல முடிவை எளிதாகக் கற்றுக்கொள்ளும் மனம் தீய முடிவு நேர்ந்தால் அதையும் எதிர் கொள்ளத்தக்க பக்குவத்தை அது பெற வேண்டும் என்பதற்காக ஆழ்மனம் அதைக் கனவாக வெளிப்படுத்தலாம்.

நிகழ்ச்சி கற்பனையானால் படைப்பாளி தான் இறுதியில் கூறப் போகும் முடிவைக் குறிப்பாக முன்னரே தெரிவித்துத்தான் எந்தச் சுவை வெளிப்பட வேண்டுமென்று எண்ணுகிறானோ, அந்தச் சுவையைப் படிப்பவனும் உணருமாறு செய்வதற்கே இக்கனவு காட்சிகளை அமைப்பதாகக் கொள்ளலாம்.

## கதைப்பாடல்கள்
## கனவுகள் (i) குழந்தைப்பேறு

தோட்டுக்காரி அம்மன் கதையில் குழந்தையில்லா மந்திரப் பூமாலை ஒருநாள் கனவு காண்கிறாள்.

"தெய்வலோகப் பொற்கிளிதான்
திருமடியில் வரவும் கண்டாள்
பாம்பரவம் மடியேறிப் படம்
விரித்தாடக் கண்டாள்
மந்திரவாள் உறை கழற்றி
மடிதனில் வைக்கக் கண்டாள்
வேட்டாளியும் கூடுகட்டி
விரைய குஞ்சு பொறிக்கக் கண்டாள்.
(ப. 17)

இதில் கிளி, வேட்டாளிக் குஞ்சு ஆகியவை பெண் குழந்தையின் குறியீடு. இதில் பாம்பு, வாள் போன்றவை உடலுறவின் குறியீடு.

## நாட்டுப்புறப் பாடல்களில் கனவுகள்

' தூக்கத்திலே கனவு கண்டேன்
தொங்கும் மாலை கண்டேன்
அள்ளி அணைக்கக் கண்டேன்
துள்ளி விழித்தெழுந்தேனே."
(டாக்டர் மா. கோதண்டராமன்
வ. மா. நா. பா., ப. 154).

இது இன்பக் கனவு. அவளது காதல் ஆசைகள் கனவாக விரிகின்றன.

## பகற்கனவுகள்

வாழ்க்கையின் சிக்கல்களைத் தீர்க்கும் திறமும் மனஉறுதியும் இல்லாமல் இருப்போர்க்குப் பகற்கனவுகள் தோன்றுகின்றன என்பர் உளவியலார். எய்த முடியாத இலட்சியங்கள் சில இருப்பதாக அஞ்சுகிறவர்களே பகற்கனவு காண்கின்றனர். உண்மையான தேவைகளையோ தாழ்வுகளையோ இவை ஈடுசெய்யவில்லையாயினும் அச்சமயத்திற்கு நிறைவு அளிக்கின்றது.

நாட்டுப்புறத்துப் பெண்கள் பெரும்பாலும் பகற்கனவில் மூழ்குகின்றனர். கல்வி குறைவு, சிந்தனை வறட்சி ஆகியவற்றோடு அவை தேவையில்லை என்றும் அவற்றை ஆண்கள் பார்த்துக் கொள்வர் என்றும் எண்ணுகிற மனப்பான்மை உடையவர்களாதலால் வாழ்க்கைச் சிக்கல்களின் முன்னால் வறியவர்களாகின்றனர். சமூகத் தடைகளும் அவர்களைச் சுதந்திரமாக இயங்க விடுவதில்லை. எனவே, பகற்கனவுகள் அவர்களுக்குச் சுகமாக இருக்கின்றன.

ஆண்களும், சமூகத் தடைகளால் தம் தேவைகளும் ஆசைகளும் முடங்கிப் போகின்றனர். அப்போது பகற்கனவுகள் தோன்றும். இவை, நெடிய பயணங்கள், நீண்டநேர உழைப்பு, தொழில் கடுமை போன்றவற்றில் வெளிப்படும்.

தொழிற்பாடல்களில் சம வயதும் எண்ணமும் கொண்டவர்களோடு பகற்கனவுகளைப் பகிர்ந்து கொள்கின்றனர்.

ஆண்களுக்குக் காதல் உணர்வுள்ள தெம்மாங்காகவும், பெண்களுக்கு ஏக்கமிக்க தாலாட்டுகளாகவும் அமைகின்றன என்பார் சா. வளவன். (நா.க., ப. 71).

தெம்மாங்குப் பாட்டில் காதலர்கள் பேசுவதும், சிரிப்பதும் உரசிக்கொள்வதும் சுகமான கனவுகளே.

" ஊரும் உறங்கையிலே
உற்றாரும தூங்கையிலே
ஆளில்லா நேரம் பார்த்து-என் ஆசை மச்சானே நீ
அண்டையிலே வந்திடு என் நேசமச்சானே

என்று அழைக்கிறாள்.

ஒரு மீனவப் பெண்ணின் தாலாட்டில் (நா. வானமாமலை, தமிழர் நாட்டுப் பாடல்கள், ப. 96) நிறைவேறாத ஆசைகள் நிகழ்வதாகப் பகற்கனவு காண்கிறாள்.

## நாட்டுப்புறக்கதைகளில் பகற் கனவுகள்

1) ஒரு குருடன் ஒருத்தன். கம்மங்காட்டுக் காவலுக்கு அவனைக் கூட்டிக்கொண்டு போய், பிடித்துப் பரண்மேல் ஏற்றி விட்டு விடுவார்கள். விடிந்ததிலிருந்து அடைவது வரை அவன் பரண் மேலேயே இருந்துகொண்டு சத்தம் கொடுத்துக்கொண்டும், தட்டி ஓசை எழுப்பிக் கொண்டும் இருப்பான்.

பறவைகள் தானியத்தை வந்து கொத்தித் தின்னும் பொழுது அவை, ஒரு மெல்லிய சந்தோஷ ஒலி எழுப்பும். குருடனுக்குக் கண் தெரியாவிட்டாலும் காதுகள் துல்லியமாகக் கேட்கும். உடனே அவன் உத்தேசமாக அந்தத் திசையில் கவண் எறிந்து அவைகளைத் துரத்துவான்.

ஆரம்ப நாட்களில் இது சந்தோஷமாக இருந்தாலும் சில நாட்களில் தனிமை அவனுக்கு ஒருவித சலிப்பை ஏற்படுத்தியது. இதைக் கண்டு கொண்ட அவன் வீட்டுக்காரர்கள் அவனை உற்சாகப்படுத்த நினைத்து, "உனக்குச் சீக்கிரமே ஒரு கல்யாணம் செய்து வைக்கிறோம்" என்று சொன்னார்கள்

குருடன் இதை நிஜம் என்று நம்பி பரண்மீது அவனை ஏற்றி விடும் போதெல்லாம், "எப்போ எனக்குப் பொண் பார்க்கப் போறீக" என்று கேட்டான். "நாளைக்கு" என்று அவர்கள் பதில் சொல்லுவார்கள் இப்படி சிலநாள் போனது.

"தினோமும் என்னை ஏமாத்திக்கிட்டே இருக்கீக; நா இன்னிக்கு காவலுக்குப் போகலை. போ" என்று பயல் அன்றைக்குக் கிறுக்குத்தனம் பண்ணினான்.

அன்றைக்குப் பரண்மீது ஏற்றும்போது "கட்டாயம் இன்னைக்கே பொண்ணு பாக்கப் போறோம்" என்று சொல்லி விட்டுப் போனார்கள்.

குருடனுக்கானால் சந்தோஷம் பிடிபடலை!

மணவடையில் உட்காருகிற மாதிரி நினைத்துப் பரண்மீது உட்கார்ந்து கொண்டான். பக்கத்தில் பொண் உட்கார்ந்திருக்கிற மாதிரி நினைத்து வெட்கப்பட்டான். துணிவு வந்து பொண் இருக்கிற பக்கமாகக் கொஞ்சம் நெருங்கி உட்கார்ந்து கொண்டான். பொண் வெட்கப்பட்டுக் கொஞ்சம் தள்ளி உட்கார்ந்து கொண்டாள். இவன் இன்னும் கொஞ்சம் தள்ளி அவள் பக்கமாக நெருங்கி உட்கார்ந்தான். அவள் கொஞ்சம் தள்ளி உட்கார்ந்தாள். இவன் இன்னும் அவளை நெருங்கினான். அவள் தள்ளி உட்கார்ந்தாள். இவன் நெருங்கினான். தள்ளி உட்கார்ந்தாள்; நெருங்கினான்.

"அய்யோ..."

பரண் மேலிருந்து குருடன் கீழேயுள்ள கல்பாறையில் விழுந் தான். கைகால் ஒடிந்து விட்டது.

இப்போது அவன் குருடன் மட்டுமில்லை; நொண்டியும் கூட,

2. ஒரு ஏழைப் பரதேசிக்கு எப்படியோ ஒரு கோழிமுட்டை கிடைத்தது. அதை வைத்துக் கொண்டு அவன் தன் கற்பனையை ஓட்டினான்.

நான் இந்த முட்டையை இருபத்தி ஓர் நாள் என் கக் கத்திலேயே பதனமாக இடுக்கிக் கொண்டே இருப்பேன். கக்கத் திலுள்ள சூட்டினால் இது இருபத்தி ஒராவது நாள் குஞ்சாகி விடும். அந்தக் குஞ்சுவை நான் எடுக்கும் பிச்சைச் சோற்றினால் வளர்த்துப் பெரிதாக்குவேன். அந்தக் குஞ்சு கோழியாகி முட்டை யிட ஆரம்பிக்கும். அப்புறம் அந்த முட்டையெல்லாம் கோழி களாகும். அந்தக் கோழிகளெல்லாம் மூட்டையிடும். இப்படி அது பெருப்பெருக அதுகளை விற்று விற்று நான் பணக் காரனாவேன்.

இப்படியாக அவன் மனோராச்சியம் செய்துக் கொண்டிருக் கும் போது தூரல் விழ ஆரம்பித்தது.

தூரல் வலுத்து மழையாக ஆரம்பித்தது. பரதேசி ஓடிப்போய் ஒரு வீட்டில் புகலிடம் கேட்டான். குயவனுக்கு வீடு நிறைய குழந்தைகளும் செய்து அடுக்கப்பட்ட பானை சட்டிகளுமாக வீடு பூராவும் நிறைந்து இருந்தது. பரதேசிக்கு இரக்கப்பட்ட குயவன், தன் வீட்டின் மச்சுவுக்குக் கூட்டிக் கொண்டு போய் காண்பித்தான். அங்கேயும் பானைகள். அதற்கிடையில், பரதேசி முட்டையைக் கக்கத்தில் இடுக்கிக்கொண்டு படுத்துக் கொண்டான்.

படுத்தவனுக்குத் தூக்கம் வரவில்லை. மனோராச்சி யத்தைத் தொடர்ந்தான். முட்டைகளையும் கோழிகளையும் விற்று விற்று பணமாக்கினான். சேவல் கட்டுக்கு இவனிடம் வந்து நல்ல நல்ல சேவல்களை நிறைய விலைக் கொடுத்து வாங்கிக் கொண்டு போன வண்ணமாக இருந்தார்கள். இந்த வியாபாரத்தை அவன் ஒருவனால் சமாளிக்க முடியவில்லை, வேலை ஆட்களை நியமித்தான். பணத்தை எண்ணி வைக்க கணக்கப்பிள்ளை போட வேண்டியிருந்தது. பணத்தைப் போட்டு வைக்க பல பெட்டிகள் வேறு செய்ய வேண்டியிருந்தது. அரண்

மனை மாதிரி ஒரு வீட்டைக் கட்டினான். நிறைய கொடுக்கல் வாங்கல் செய்தான். பணம் இப்படிப் பெருகும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. கப்பல் வியாபாரியானான். பல கப்பல் வியபாரிகள் வந்து கடன் வாங்கிப் போனார்கள். அவர்களில் ஒருவன் இவனை ஒரு கல்யாண வீட்டில் ஏற்கனவே விரட்டி விரட்டி அடித்தவன்.

"கடனா வேணும் உனக்கு இந்தாலே பிடி" என்று காலால் எட்டி உதைத்தான்.

அவ்வளவுதான். அருகில் அடுக்கி வைத்திருந்த பானையெல்லாம் மடமடவென்று விழுந்து நொறுங்கின. முட்டையும் உடைந்து போயிற்று.

குயவன் பரதேசியைத் தன் ஆத்திரம் தீர அடித்து நொறுக்கி வெரட்டினான்.

கண்ணாடிப் பாத்திரங்கள் விற்றுப் பிழைத்த சுல்நாசர், ராஜா மகளைக் கல்யாணம் பண்ணி அவளைக் காலால் எத்திய கதையைப் போல் தமிழிலும் நிறைய உண்டு.

ஒரு வளையல் வியாபாரி இதுபோல் செய்ததாகக் கதை உண்டு.

தலையில் தயிர் பானையை வைத்துக் கொண்டு கற்பனையில் பெருமையாகக் கை வீசி நடந்தாள். தயிர்ப்பானையைத் தவறிக் கீழே போட்டு உடைத்து விட்டு அழுதாள்.

ஒரு ஊரிலே ஒரு புருசன் பெண்டாட்டி இருந்தார்கள். ரொம்பவும் ஏழைகள். பாவம். அவர்களுக்கு மோர்பால் மீது ரொம்பவும் ஆசை வந்து விட்டது. ஒரு பசு மாடு பிடித்தால் எப்படியிருக்கும் என்று பேசிக்கொண்டார்கள். பசுமாடு பிடித்தால் பெண்டாட்டி அதை மேய்க்கிறது என்றும் புருசன் மட்டும் கூலி வேலைக்குப் போகிறது என்றும் தீர்மானித்தார்கள்.

வெறும் பச்சைத் தண்ணீரை விட்டே தினமும் கம்மங்கஞ்சி குடிப்பதை விடப் பசு மோரைத் தாராளமாக விட்டுக் கரைத்துக் குடிக்கிறது எம்புட்டு ருசியாக இருக்கும் என்று நினைத்துப் பார்த்தார்கள். உடனே ஆனந்தத்தில் 'நிஜமாகி' விட்டார்கள்.

திடீரென்று அவள் தன் புருசனிடம் சொன்னாள், "அண்ணன் வீட்டுக்குக் கொஞ்சம் மோர் கொண்டு போய் கொடுக்கட்டுமா ?"

புருசன் அவளைக் கோபமாய்ப் பார்த்தான் அந்தச் சோலியே வச்சிக்கிடப்படாது; கெட்ட கோவம் வரும் - எனக்கு.''

''அப்படி சொல்லாதீக; பாவம் அந்தக் கொழந்தைக. மோரு தண்ணிக்கு ஏங்கிப் போயிருக்கு; கொஞ்சம் கொடுத்துட்டு வந்திருதனே'' என்று எழுந்திருந்தாள்.

புருசக்காரனுக்குக் கோபம் வந்து விட்டது. ''நாஞ் சொல்லிக் கிட்டே இருக்கேன், அண்ணன் வீட்டுக்குக் கொண்டு போயி மோரு கொடுக்கப் போரா பாரேன், சிறுக்கி மக'' என்று எட்டித் தலை மயிற்றைப் பிடித்து வளைத்து நாலு போடு போட்டான்.

''நா அப்படித்தாங் கொண்டு போயிக் கொடுப்பேன்; அவுகளுக்கு இல்லாத மோரா. அவுகளுக்கு இல்லாத மோரா.'' என்று அவள் சொல்லச் சொல்ல புருசன் அவளை அடி நொக் கெடுத்துட்டான்.

அவளும் அடிபொறுக்க மாட்டாமல் அண்ணன்காரன் வீட்டுக்குப் போனாள். அவன் இந்தக் கூத்தைக் கேட்டுச் சிரித்துவிட்டு மச்சான் வீட்டுக்குப் போனான்.

''படவா, என் படப்பில் கொண்டு வந்து உன் பசு மாட்டை மேயவிட்டு, கூளத்தையெல்லாம் ஒளப்பினதும் இல்லாமே என் பசு மாடு அது இதுண்ணா கேக்கே'' என்று சொல்லி தங்கச்சி மாப்பிள்ளையைச் செம்மையாக அடித்தான்.

விவகாரம் நடந்தது, கதையைக் கேட்டவர்கள் சிரித் தார்கள். ''சரிதான் சரிதான். இல்லாத மோருக்காக நீ அவளை அடிச்சே. இப்போ இல்லாத பசு மாட்டுக்காக அவன் உன்னை அடிச்சான். அதுக்கு இது சரியாப் போச்சு'' என்றார்கள்.

## புராணக் கதைகள்

அறிஞர் சி. ஜி. யுங், (C J. Jung) மனிதனுடைய அளுமைத் தன்மையினையும் அது அமையும் பாங்கினையும் ஆராயுங் காலைத் தொன்மத்திற்கு இன்றியமையா இடந்தந்துள்ளார்

அவற்றை நாம் புரிந்து கொள்ள வேண்டுமானல் நெருங்கி வந்து உறவாட வேண்டும். அவற்றில் அடங்கியுள்ள படிமப் பொருளைக் காணலாம். என்பார் கதிர். மகாதேவன்

(தொன்மம், ப. 7). கனவு உலகமும் புராண உலகமும் மனத்தின் - விழிப்பு நிலையின் அடித்தளத்தில் உள்ள ஆழ் மனத்தில் கருப்பெறுகின்றன.

சமயங்களின் படிமங்கள் தொன்மம் எனும்மொழி வாயிலாகவே கருத்துக்களைப் புலப்படுத்துகின்றன. மனிதனின் மனக்கிளர்ச்சி, தேவைகள், விருப்பம், இச்சை என இன்ன பிற இயல்புகளைப் புராணங்களைக் கணிப்பதன் மூலம் அறியலாம். மனிதனின் உளப்பாங்கு தரும் உருவகங்களாகக் கொள்ளலாம். நிறைவேற்றிக் கொள்ளாத ஆசைகளும் புராணங்களாக மாறுவதுண்டு. எனவே, இதனைச் சமுதாயக் கனவுகள் எனலாம்.

மகாபாரதம், இராமாயணம் போன்ற புராண இதிகாசக் கதைகள் வில்லுப்பாடல்கள், கணியான் பாடல்கள், கதைப் பாடல்கள் போன்ற பாடல் வடிவங்களிலும் பாவைக்கூத்து, பொம்மலாட்டம், தெருக் கூத்து, போன்ற கூத்து வடிவங்களில் தமிழ்ச் சமூகத்தில் பரவியுள்ளன. இவற்றின் வடிவங்கள் வேறுபட்டாலும் கதையளவில் மாறாமல் உள்ளது குறிப்பிடத் தக்கதே.

இவற்றுள் பஞ்ச பாண்டவர் வனவாசம், தருமர் அசுவமேதயாகம், கிருஷ்ணன் தூது, கர்ணமகாராஜன் சண்டை, நளச்சக்கரவர்த்தி கதை, வாலி மோட்சம், சித்திராபுத்திர நயினார் கதை போன்றவை மேற்சொன்ன நாட்டுப்புறக்கலை வடிவங்களில் வெளிப்படுகின்றன. கதைப்பாடல்களில் அல்லி அரசாணி மாலை, ஆரவல்லி சூரவல்லி, பவளக் கொடிமாலை, மின்னொளியாள் குறம், ஏணியேற்றம், புலந்திரன் களவு மாலை, புலந்திரன் தூது போன்றவை புராணச் சார்புடைய கதைகளாக வெளிப்படுகின்றன.

பொதுவாகப் புராணக்கதைகள் மிகப்பழங்காலத்தில் நடந்த உண்மை நிகழ்வுகளாக நம்பப்படுகின்றன. சமய ரீதியில் இயற்கை சமூகம் ஆகியவை குறித்த கேள்விகளுக்கு விளக்கம் அறிக்க முற்படுகின்றன. கோட்பாடுகள் கருத்துருவங்களாகவும் புனிதத் தன்மை கொண்டவைகளாகவும் விளக்கம் பெறுகின்றன. இவை இறையியலோடும் சடங்குச் செயலோடும் தொடர்பு கொண்டுள்ளன. கதை உறுப்பினர்கள் மனிதர்களாக இல்லாமல் விலங்குகளாகவோ தேவதைகளாகவோ இருப்பினும் மனித இயல்புகளோடு இருப்பர். இவற்றுக்குக் கால இட

அடையாளங்கள் உண்டு. வரலாற்றுச் சிறப்பு மிக்க இனக் குழுத்தலைவர் தலைவியரைப் பெருமைப் படுத்தும் கதைகளும் காணப்படுகின்றன. பின்னர் இவற்றோடு அமானுடத்தன் மையும் இணைத்துக் கற்பிக்கப்படும்.

ஓர் இனத்தின் நிறைவேறாத ஆசைகளே புராணக் கதைகள் என்பார் பிராய்டு.

இரவுக்கும் பகலுக்கும் புயலுடன்கூடிய இடிக்கும் அதிகாலை வானத்துக்கும் இடையே ஒரு காலத்தில் தேவலோகத்தில் நடைபெற்றதாகக் கூறப்படும் சண்டைகளைப் பற்றிய தேவதைக் கதைகளும் புராணக்கதைகளும் தற்போது வேறுபொருள் காட்டு கின்றன. அதாவது அவை ஆடவர் பெண்டிரிடையே நடை பெறும் பாலியல் சிக்கல்களை காட்டும் என்பர் உளவியலாளர், கதைகளில் வரும் குச்சிகள், மரங்கள், குடைகள், கத்திகள், சுத்தியல்கள், வானவூர்திகள் போன்ற குறியீடுகளாக ஆண் பிறப்புறுப்பு உருவகப்படுத்தப்படுகிறது. குகைகள், பாட்டில்கள், பெட்டிகள், கதவுகள், நகைப்பெட்டிகள், தோட்டங்கள், பூக்கள் போன்ற குறியீடுகள் பெண்பிறப்புறுப்புகளைக் குறிக்கின்றன என்பர்.

அத்துடன், நடனம், சவாரி செய்தல், மரமேறல், மலை யேறல், பறத்தல் முதலியன பற்றிய கனவுகள் அல்லது தேவதைக் கதைகள் பாலியல் துய்ப்பாகக் கருதப்படுகின்றன. தலைமுடி உதிர்தல் காயடிப்பதாகக் கருதப்படுகின்றது.

கார்ல் ஆபிரகாம் என்பவர் 'கனவுகளும் புராணக்கதைகளும்' என்ற நூலை எழுதினார். இந்நூல் பிராய்டின் ஆய்வு முறையைப் பின்பற்றியது. அத்துடன் அடால்பர்ட்குன் என்பவரின் ஒப்பியல் புராணவியலைப் பின்பற்றி, பிராமித்தியுஸ் (Prometheus) புராணக் கதைக்குத் (பூமிக்குத் தேவர்களுடன் போராடி நெருப்பைக் கொணர்ந்தவர்) தன் விளக்கத்தைக் கூறினார். புராணக்கதையின் புறவடிவில் வானியல் தாக்கம் இருக்கலாம் என்று கருதுகிறார். பிராமித்தியுஸ் மின்னலாகவும் துளையிடுபவராகவும் உற்பத்தி செய்பவராகவும் கருதப்படுகிறார். மின்னல்தான் பழங்கால மனிதனுக்கு நெருப்பைக் கொடுத்தது என்ற நம்பிக்கையுண்டு. ஆனால் பழங்கால மனிதன் ஒரு நேரான கடினமான கோல் கொண்டு, ஒரு மென்மையான வட்ட வடிவ மரக்கட்டையிலிருந்து

தீயைக் கடைந்து எடுத்தான். இப்பொருட்கள் இன்றியமையாத பிறப்புறுப்புகளின் குறியீடுகளாம். பிராமித்தியுஸ் கதை மானிட வாழ்வில் இனப் பெருக்கத்திற்குரிய ஆண்மைத் தன்மையைக் குறிப்பிடுகின்றது என்பார்.

புராணங்களை அடிமனத்தின் புறச்சாட்டுதல் (Projection .of the Subconsious) எனலாம். எல்லா மானுடர்களும் ஓரளவு பங்கு கொள்ளும் ஒரு அடித்தள அடக்கு, அடிநிலைக்கூறு, அடிநிலைத்தளம், புராணம் எனலாம். ஒரே இனத்தின் உறுப்பினர்களும் ஒரே தேசத்தின் உறுப்பினர்களும் ஒரே பண்பாட்டின் உறுப்பினர்களும் ஓரளவு பங்கு கொள்ளும் அடுக்கு புராணமாகும். இதுவே நடத்தை விதிகள் (Character of behaviour) என்றும் கூறுவர்.

## ஓரினக்கலவி (Inverts)

இதனை ஒருபால் போகம் (Homo sexuality) என்பர். இது ஓரினத்தவரிடையே நிகழ்வது. ஒரு ஆண் இன்னொரு ஆணிடமும், ஒரு பெண் இன்னொரு பெண்ணிடமும் பாலின்பம் அடைவது.

சிவனும் திருமாலும் கூடியே ஐயப்பன் அல்லது சிவன் அணைந்த பெருமாளை உருவாக்கியதாக ஒரு புராணக்கதை கூறுகிறது. இது ஓரினக் கலவிக்குச் சான்றாகும்.

## சுய இன்பப் பழக்கம் (Masterbation)

இதனைத் தற்பாலுணர்ச்சி (Auto erotiecim) அல்லது சுய இன்ப நுகர்வு (Self gratification) என்பர்.

இதுவும் ஒருவகை வடிகால்தான். இதனை உளவியலாளர் பாலியல் பணியின்மை (Sexual unemployment) அல்லது இயல்பான பால் மாறுபாடு (Normal sexual devient) என்பர்.

பார்வதி, பிள்ளையாரைத் தன் அழுக்கில் இருந்து உருட்டி உருவாக்கினாள். சிவன் முருகனைத் தன் நெற்றிக்கண்ணில் இருந்து உருவாக்கினான் என்பது போன்ற புராணக் கதைகள் சிற்றின்ப தற்பழக்கம் அல்லது சுய இன்பப் பழக்கத்தைக் காட்டும்.

## சடங்குகள்

பல்வேறு சடங்குகள் உளவியல் அடிப்படையில் உள்ளன

## ஔவை நோன்பும் செழுமையும்

பெண்கள் மட்டும் நள்ளிரவில் செய்யும் இந்நோன்பும் ஒரு வகை வளமைச் சடங்குதான். விரதத்தின்போது அவர்கள் நிர்வாணமாக இருப்பார்கள் என்பது நம்பிக்கை. 'முன்னே எப்படியோ இப்ப அப்படியில்லை' என்கின்றனர். எனினும், சில இடங்களில் பூசை நடத்தும் பெண்மணி மட்டும் பூசை வேளையில் தனியாக ஆடையின்றிப் பூசை செய்து முடிப்பார் எனத் தெரிய வருகிறது இந்நிர்வாண பூசையால் செல்வம் பெருகும் என்பது நம்பிக்கை என்பார் செந்தீநடராசன் (நா. வ. 205) இந்நம்பிக்கையை வளர்க்க இரவில் ஔவை பற்றிய கதைகளைக் கூறுகின்றனர்.

இந்நோன்பு 'அவ்வை' என்னும் செழிப்பைத் தரவல்ல தாய்த் தெய்வத்தை முன்னிறுத்தி செழிப்பு பெறுவதற்குரிய சடங்காசாரங்களை உள்ளடக்கியதாகத் தோற்றமளிக்கிறது.

1. அவ்வை உருவம் செய்வதற்குப் பெண்கள் குளிக்கின்ற ஏழுகுளத்து மண்ணைப் பயன்படுத்துகிறார்கள் இதில் பெண்கள் குளிக்கும் மண் என்பது செழிப்பின் குறியீடாகும்.

2. அவ்வை உருவம் கூம்பு வடிவமாகவே அமைந்திருக்கும். கூம்பு லிங்கத்தின் குறியீடு.

3. இரவில் இவர்கள் அவித்தெடுக்கும் கொழுக்கட்டைகளில் ஆண்-பெண் குறிகளையும் செய்வர். இனக்குழுமக்களின் நம்பிக்கையில் ஆண்-பெண் குறிகள் செழிப்புக்கு (Droductivity) அடையாளங்கள் ஆகும்.

4. அவர்கள் சுவரில் மஞ்சணையினால் பெண் உறுப்பு போல தீற்றுவார்கள். இதுவும் செழுமைக் குறியீடே.

"கார்த்திகை தீபத்தன்று நெருப்பூரில் உடலுறவுப் பாடல்களைப் பாடுகின்றனர். இப்பாடல்கள் நூற்றுக்கும் அதிகமாக ஒலிப்பதிவு செய்யப்பட்டன. அவற்றில் ஒரு சிலவே இந்நூலில் இடம் பெற்றுள்ளன. அவற்றிலும் உடலுறவு-உடலுறவு உறுப்பு

களைப் பற்றிய சொற்கள் நீக்கப்பட்டுள்ளன. ஆய்வு நோக்கில் இந்நூல் வெளியிடப்படினும் சட்டத்தின் கரங்களில் சிக்கிச் சீரழிந்து ஆய்வாளர்களுக் ம் அறிஞர்களுக்கும் கிடைக்காமல் போய்விடக் கூடாதென்ற அச்சத்தின் காரணமாகவே இச்சொற் கள் நீக்கப்பட்டுள்ளன. ஆகவே, இச்சொற்களை நீக்கி வெளியிடு வதற்கு, நாட்டுப்புறவியல் அறிஞர்களிடம் என் வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்''. என்கிறார் கிருஷ்ணசாமி (கொ. நா. பா., முன்னுரை)

## புணர்ச்சியும் விளைச்சலும்

விளை நிலத்தில் புணர்ச்சி செய்வது விளைச்சலை அதிகப் படுத்திச் செழிப்பைத்தரும் என்ற நம்பிக்கை உலகளாவியது எனலாம்.

மத்திய அமெரிக்காவில் உள்ள பிபிலர்கள் விதைக்கு முன் ஆண் பெண்ணை அழைத்து வந்து தங்கள் விளை நிலத்தில் நான்கு நாட்களுக்குப் புணரச் செய்வர்.

ஜெர்மனியர்கள் அறுவடைக்கு முன் ஆணும் பெண்ணும் கட்டிப் புரள்வர் என்பார் ப்ரேசர் (The Golden Bough, P.186)

நிறை விளைச்சலை உறுதிப்படுத்திக் கொள்வதற்குப் புணரு வது தவிர்க்க இயலாதது என்றும் நம்பி இப்புணர்ச்சிச் சடங்கு நடை பெறுகிறது என்பார் ராபர்ட் பிரிபால்ட் (Robert Briffaulte, The Mothers, Vol. IV P 190).

கார்த்திகை தீபத்தன்று மூன்று நாட்களுக்கு எந்தப் பெண்ணும் எந்த ஆணுடனும் உடலுறவு கொள்ளத் (Promi-scurity) தடையில்லை என்ற செய்தியை நெருப்பூரில் (தர்மபுரி) கேள்விப்பட்டேன் என்பார் கிருஷ்ணசாமி. ஆண் பெண் உடலுறவு கொண்டு இனப்பெருக்கம் செய்வதைக் காணும் இயற்கை தானும் அதே போல் (Imitative Magic) செய்து உணவுப் பொருட்களைப் பெருக்கும் என்ற நம்பிக்கையில் இச்சடங்குகள் செய்யப்படுகின்றன. விளை நிலத்தில் புணர்ந் தால் பயிர்கள் நன்கு விளையும் என்ற நம்பிக்கையுண்டு.

நெற்றியில் சிகப்பு அல்லது குங்குமம் அல்லது மஞ்சள் பொட்டிடுதல் பூப்பெய்திய அல்லது குழந்தைப்பேற்றின் பொழுது ஏற்படும் குருதியின் அடையாளமாகும். எனவேதான், விதவைப்

பெண்கள் மறுமணம் செய்யக் கூடாது என்ற பண்பாடுள்ள சமூகத்தில் அவர் பொட்டு வைப்பதும் தடுக்கப்படுகிறது.

(கொ. நா. பா., மூன்னுரை)

கார்த்திகை தீபத்தன்று நாடெல்லாம் நெருப்புவிழா கொண் டாடப்படுகின்றது. அன்று ஒவ்வொரு ஊரிலும் கூம்பு வடிவில் எரி பொருளை அடுக்கி நெருப்பிட்டுத் தாண்டுவார்கள். அவ்வாறு தாண்டினால் குழந்தை இல்லாதவர்களுக்கு அடுத்த ஆண்டிற்குள் குழந்தைப் பேறு கிடைக்கும் என்று நம்புகின்றனர்.

(கொ. நா. பா., மூன்னுரை)

## பாடல்கள்

கார்த்திகை தீபத்தன்று நெருப்புப்பந்தத்தை வேகமாகச் சுற்றிக்கொண்டே உடலுறவுப் பாடல்களைப் பாடுவர். மூன்று நாட்கள் அருகிலுள்ள குன்றின்மீது இருந்து கொண்டு இளை ஞர்கள் போட்டிப் போட்டுக்கொண்டு பாடல்களைப் பாடு கின்றனர். ஆறு அல்லது ஏழு வயது சிறுவரிலிருந்து தண் டூன்றித் தட்டுத்தடுமாறிச் செல்லும் தொண்டுக் கிழவர் வரையிலும் இப்பாடல் போட்டி நிகழ்கிறது. பெண்கள் இப்பாட்டுப் போட்டி யில் கலந்து கொள்வதில்லை என்றாலும் கேட்டுக்கொண் டிருப்பதுண்டு. இப்படிப் பாட ஆண்டுக்கொரு முறை-இவ்விழா வன்று மட்டும் யாரைப்பற்றி வேண்டுமானாலும் எப்படி வேண்டுமானாலும் பாடுவதற்குச் சமுதாயம் அனுமதிக்கிறது.

“கம்பங் காட்டுக்குள்ளே கண்ணாட்டி வாடி
கம்பங் காட்டுப் பொம்மை
கழுத்து வரை (புழுத்தியிருக்கும்)
கம்பங் காட்டுக்குள்ளே நாமும்
கச்சிதமா (ஓத்தாலே)
கம்பும் வளர்ந்திடும்
கட்டாயம் உறவும் வளர்ந்திடும்
பருத்திக் காட்டுக்குள்ளே பாப்பாத்தி வாடி
பருத்திக் காட்டுப் பொம்மை
பல்லு போல (புழுத்தியிருக்கும்)
பருத்திக் காட்டுக்குள்ளே நாமும்
படுத்து (ஓத்தாலே)
பருத்தி வளர்ந்திடும்

பருவமும் நீயாயிடுவே" (நா.வ,ப.194)
என்றுபாடுவர்.

ஏலந்து மரத்து மேலே எள்ளு
அவ பேரு ......—
ஆடே அறுத்தா
அவங்கிட்ட போனா
எண்ணெய் தேச்சா
எங்கிட்ட வந்தா
தண்ணீர் ஊத்னா
தம்பி கிட்ட வந்தா
கோழி யறுத்தா
குறவங்கிட்டே போனா
கில்லலேலோ கீசா

(கொ.நா.பா.,ப. 138)

இது வரன்முறையற்ற உடலுறவினைக் காட்டும்

"காடைக்குக் கண்ணாடி
கருப்புச் சீலை ஒய்யாரி
வேலைக்குச் சோம்பேறி
......... ராஜா
கில்லலேலோ கீசா"

(கொ நா பா ,ப 139)

இதில் உடலுறவில் ஒருவன் திறமையாக இருப்பதைக்காட்டும்.

## ஆடல்கள்

இயற்கை நிகழ்வுகள் குறித்த அறிவியல் பூர்வமான அறிவு மிகவும் குறைந்திருந்த இனக்குழு சமூகத்தில் மழை வேண்டி நிகழ்த்தப்பட்ட நடனங்கள், கோடை காலத்தை வரவழைப் பதற்கான நடனங்கள், தேய்பிறையை வளர்பிறையாக மாற்றச் செய்வதற்கான நடனங்கள் இருந்தன என்பார் ஜார்ஜ் தாம்சன். இவை புராதன கால மந்திரச் செயல்களைக் குறிப்பன என்பார். (மனித சமூக சாரம், ப. 116)

நமக்கு மழை தேவைப்படும்போது மேகங்கள் கூடுவது போலவும் இடி இடித்து மழை பொழிவது போலவும் பாவனைச் செயல்கள் கொண்ட நடனத்தை நிகழ்த்துகின்றோம். நாம் எதார்த்தத்தில் வருப்பப்படும் நிகழ்வைக் கற்பனையில் நிறை வேற்றிக் கொள்கிறோம் எனலாம்.

## கும்மி

சேலம் மாவட்டத்தில் ஆத்தூருக்கு அருகிலுள்ள பேளூரில் மழை வேண்டி, கன்னியரும் சுமங்கலிகளுமாக ஏழுபேர் நிர்வாணக் கோலத்தில் வட்டமாகத் தங்களின் பின்புற குடுவையைத் தட்டியவாறு ஆடுவர். பெண்களின் இனப்பெருக்க உறுப்பைச் செழிப்பின் சின்னமாகக் கருதி, அதை நிலத்திற்குக் காட்டி நிலம் செழிப்புச் சக்திபெறும் என்ற நம்பிக்கையில் இவ்வாறு செய்கின்றார்கள் என்பார் கிருஷ்ணமூர்த்தி (நா. வ. ப. 182)

## பொம்மைகள்

உழவர்கள் தங்கள் விளை நிலங்களில் விளைச்சல் காலங்களில் பொம்மைகளை நிறுத்தி வைப்பர் பயிரின் பெயரைச் சேர்த்து சோளக்காட்டுப் பொம்மை, பருத்திக் காட்டுப்பொம்மை என்று அழைப்பர். இவை களிமண்ணாலும், சிலவிடங்களில் துணி வைக்கோல் போன்றவற்றாலும் செய்யப்பட்டிருக்கும். இதில் பெண்ணின் உருவமாயின், பெண்மை உறுப்பு நன்கு தெரியும்படி வைப்பர். அத்தோடு மார்பையும் பெரிதாகக் காட்டியிருப்பர். பெண்மை உறுப்பு நிலத்திற்கும் விளையும் பயிர்களுக்கும் காட்டுவது போல் அமைக்கப்பட்டிருக்கும். இதனால் நிலம் வளம் பெருகும் என்றும் பயிர்கள் பலமடங்கு விளைவு தரும் என்றும் நம்புகின்றனர். (நா.வ., ப. 188)

சிலர் தம் விளை நிலங்களில் ஆண் உருவப் பொம்மைகளை வைப்பர். இதில் ஆணின் உறுப்புப் பெரிதாகச் செய்து காட்டப் பட்டிருக்கும். இதுவும் செழிப்புத் தரும் ஆற்றலுடையது என எண்ணுகின்றனர். லிங்கம் தொடக்கத்தில் பயிர்த் தொழிலின் குறியீடாகவும், யோனி நிலத்தாயைப் பிரதிநிதித்துவப் படுத்துவதாகவும் இருந்தது. (ப. 190)

தர்மபுரி மாவட்டம் ஜருகு என்ற ஊருக்கருகில் செழிப்பு விழா நடைபெறுகின்றது. களி மண்ணால் செய்யப்பட்ட ஆண் பெண் உருவங்கள் தரையில் கிடத்தப்படும். விழாவின் இறுதி நாளன்று இரவு, ஒரு கிராமத்தான் களிமண்ணால் செய்யப்பட்ட ஆண் குறியைக் கொண்டு வருவர். மற்றொரு கிராமத்தார் பெண் குறியைச் செய்து வருவர். பின் ஆண் குறியைப் பெண் குறியில் நட்டு வைப்பர். கிடத்தப்பட்டிருக்கும் ஆண் பெண் உருவங்களைப் புணரும்படி செய்வர். விழாவின் தொடக்க நாளன்று இப்பொ-

மைகள்மீது தானியங்களைத் தூவி வைப்பர். இறுதி நாளில் இவை முளைவிட்டிருக்கும். மக்கள் களி மண்ணோடு ஒருபிடி பெயர்த்துக்கொண்டுபோய் தங்கள் தங்கள் விளை நிலங்களில் தூவுவர். அதனால் வயல் வளம் பெறும் என்று நம்புகின்றனர் என்பார் ஆர். பூங்குன்றன் (கொங்குநாட்டு வளமைச் சடங்கு, கல் வெட்டு 1978)

இதுபோன்ற சடங்கு திருச்சி மாவட்டத்தில் கருருக்கு அருகில் வேலாயுதம் பாளையத்திலும் நடைபெறுகிறது. ஆண் பெண் புணர்ச்சியின்போது பெண் பொம்மையின் உறுப்பில் கஞ்சியை ஊற்றுகின்றனர். இக்கஞ்சியைச் 'சுக்கிலம்' என்பர்.

## குறியீட்டு சடங்குகள்

பருவம் அடைந்த பெண்களைப் பச்சையோலைக் குடிசை யில் வைக்கும் வழக்கமும் கொங்குப் பகுதியில் உண்டு. பச்சை ஓலை வளமைக்கு அடையாளம். இதனால் அவளும் வளமை பெறுவாள் என நம்புகின்றனர். பெண்ணை உட்கார வைத்து அவள் முன்னே பச்சை நெல்லை லிங்கம் போல குவித்து வைப்பர். இது (Phallic symbolism) ஆகும். இந்த லிங்க இனப் பெருக்க வளமை அதன் முன் அமர்ந்திருக்கும் பெண்ணிற்குச் செல்லும் என்பது நம்பிக்கை.

(கொ. நா.பா., முன்னுரை)

## மழைச்சடங்கு

கோவை, சேலம், தர்மபுரி மாவட்டங்களில் உள்ள தொலைதூரக் கிராமங்களில் தொடர்ந்து மழைபெய்யாது போகும் போது ஊரின் ஓரத்திலுள்ள நிலங்களில் தீட்டு நின்ற பெண் களும் கன்னிப்பெண்களும் நிர்வாணமாகத் தங்கள் பிட்டத்தைக் கையால் தட்டிக் கொண்டு கும்மி அடிப்பது போல் வட்டமாகச் சுற்றி வருவார்கள். இந்நிகழ்ச்சியின் போது பாடலும் பாடப் படுகின்றது. இப்பாடலைப் பிறருக்குக் கூற மறுக்கின்றனர்.

(நா.வ.,ப. 225)

## குளியல்

தர்மபுரி மாவட்டத்தில் டெங்கனிக் கோட்டைக்கு அருகில் உள்ள பிக்கன ஹல்லி என்னும் ஊரில் கடவுளிடம் தங்கட்குக் குழந்தைப்பேறு வேண்டுமென வேண்டிக்கொண்ட பெண்கள்

ஆண்டில் ஒரு குறிப்பிட்ட நாளன்று கோயிலின் புனித ஏரியில் திர்வாணமாகக் குளிப்பர். எல்லோரும் ஒன்றாகக்கூடிக் கரைக்கு வந்து இலை ஆடையை மேலே போட்டுக்கொண்டு கோயிலை வலம் வருவர். முன்பு இவை நிர்வாணமாகச் செய்யும் சடங்காக இருந்திருக்க வேண்டும். பெரியபாளை யத்திலும் (திருத்தணி வழியில்) இச்சடங்கு நடைபெறுகிறது.

(ஆனந்த விகடன் 12-8-1979)

## உளவியல் மருத்துவம் - பழமொழிகளில்

'மன நோய்க்கு மருந்துண்டோ ?'

என்பது பழமொழி. மன நோய்க்கு மனத்தின் போக்குகளே மருந்தாகின்றன.

இது பற்றி பல கதைகளிலும் சடங்குகளிலும் சான்றுகளைக் காணலாம்.

## நம்பிக்கைகளும் சடங்குகளும்

மனித வாழ்வில் நம்பிக்கைகள் தவிர்க்க முடியாத இடத்தைப் பெற்றவை ஆகும். சகுனம் பார்த்தல், வேண்டுவன செய்தல், தியானம் மேற்கொள்ளுதல், கண்ணேறு கழித்தல் போன்ற நூற்றுக்கணக்கான நம்பிக்கைகள் காலந்தோறும் தோன்றி அன்றாட வாழ்வில் இடம் பெற்று இன்றியமையாதனவாக - இன்றும் நிலவி வருகின்றன. மனித வாழ்வின் உறுதிபாட்டிற்கு நல் ஆதரவை வழங்கும் இத்தகைய நம்பிக்கைகள் ஒவ்வொரு வரின் வாழ்விலும் இன்றியமையாது தேவைப்படுகின்றன என்பார் ஜேம்ஸ் வின்செஸ்டர்.

இந்த நம்பிக்கையுடன் உள் மனமும் தொடர்புடையது என்பார் க. வெங்கடேசன். காரண காரியங்களுக்கு அப்பாற் பட்ட சில உண்மைகளை உள் மனம் திடீரென்று மூளைக்கு உணர்த்துகிறது. மூளையில் பதியும் அந்த எண்ணங்கள் உண்மையாகி உறுதிப்படும் போது நம்பிக்கையாகி விடுகிறது. எனவே, நம்பிக்கைகளின் ஊற்றுக் கண் மனிதர்களின் உள் மனம் ஆகும். (ஆ நோ. நா.ம., ப.35) எனவே, நம்பிக்கையின் மூலம் உள் மனதை மாற்றி நோயைக் குணப்படுத்த இயலும். நம்பிக்கைகள் மனத்தில் அசைக்க முடியாத நிழற் படமாகப் பதிந்து அதற்குத் தகுந்தவாறே உடலின் எல்லாப் பாகங்களும் இயங்க முற்படுகின்றன.

அறிஞர் ப்ருக்ஸ், "மனத்தில் ஆணித்தரமான நம்பிக்கைகள் உதயமாக வேண்டும். குருட்டு நம்பிக்கையாக இருந்தாலும் பரவாயில்லை. எனக்கு இப்படித்தான் நடக்க வேண்டும். நோய் நீங்க வேண்டும் என்று மனமாற நினைத்துப் பலமுறை சொல்லிக் கொண்டால் அற்புதமாகவே நிகழும்" என்பார்.

நாட்டுப் புறத்து நம்பிக்கைகள் இப்படித்தான் மக்களிடம் வாழ்ந்தும் வளர்ந்தும் வருகின்றன

மனம் என்கிற ஒன்று இந்த உடம்பைப் பாதிக்கிறது. சிக்மென்ட் ஃபிராய்டு இதனை நிறுவியிருக்கிறார். கி. ராஜ நாராயணன் தொகுத்த ஒரு கதை இதற்குச் சான்றாகும். (ஜூ.வி., 12-12-90)

ஒரு ஊர்ல ஒரு போக்கிரி இருந்தான். சரியான தடிமாட்டுப் பயல். ராச்சஸன் போல இருப்பான். அவனால சனங்களுக்கு ரொம்பத் தொந்தரவு.

இதனால் ஊர் பூராவுமே பாதிக்கபபட்டதால் எங்கே கண்டாலும் 'அந்தப் போக்கிரிக்கு எதிரே என்ன செய்ய' என்று யோசித்தது. கடேசியில் சில இளவட்டங்கள் கூடி முடிவு எடுத்தார்கள்.

மறுநாள் போக்கிரி வெளியூருக்கு மகள் வீட்டுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தான். இளவட்டங்கள் அவனது பயணத்தைத் தெரிந்து கொண்டனர். போக்கிரி போகிற பாதையில் வரிசையாக நின்று கொண்டார்கள்.

மந்தைக்குப் போக்கிரி வந்ததும் ஒரு இளவட்டம் "அண்ணா மொகம் கெந்தளிப்பா இல்லையே. கொஞ்சம் வாட்டமாத் தெரியுதே. எப்பவும் சுதாரிப்பா இருப்பியளே" என்று பரிவோடு கேட்டான்.

அப்படியெல்லாம் இல்லை என்று பதில் கூறிவிட்டுச் சென்றான் போக்கிரி.

கொஞ்சதூரம் போனதும் இன்னொரு இளவட்டம் "அண்ணாச்சி இந்த நிலையிலெ ஒத்தையிலெ ஏம் போகணும்? எங்கக் கூட்டாளியத் தொணைக்கு கூப்பிட்டா வரமாட்டமா? "என்றான்

"அட எனக்கெதுக்குப்பா தொணை" என்று கூறிவிட்டுக் கையை வீசி நடந்தான். "ஒடம்ப இம்புட்டு மோசமா வச்சிக்கிட்டு ஊரு வழியாப் போகலைன்னா என்னா?" என்று பின்ன

விருந்து தனக்குள் சொல்வதுபோல் சொன்னான். நிமிர்ந்து கையை வீசிவீசிபபோன போக்கிரிக்குக் கை வீச்சுமானம் குறைந்தது. நடைமெதுவாயிற்று. உடம்பு கொஞ்சம் தொய்வுறத் தொடங்கியது. எதிர்வெயிலில் வேர்த்து கொட்டியது.

ஆனாலும் கெத்து விடாமல் நடந்து போனான். தண்ணீர் குடிக்க வேண்டும் போலிருந்தது. களைப்பு தோன்றியது. எங்காவது உட்காரலாமா என்று மரநிழலைத் தேடினான். அப்போது "ஐயோ நம்ம அண்ணாச்சிக்கு என்ன" என்று பதறிக் கொண்டே ஒரு இளவட்டம் ஓடி வந்தான். "எனக்குத் தொணைக்குக்கூட யாருமில்லையே" என்று அழுவது போல் கையைப் பிசைந்தான். "அட ஒண்ணுமில்லப்பா...பயப்படாதே கொஞ்சம் ஆயாசம்" என்றான் போக்கிரி.

உடனே இளவட்டம் யாரும் இல்லாத திசையைக் காட்டி "அந்தாப் போறாகளே அவுகளைச் சத்தம் காட்டட்டுமா "என்று கேட்க, போக்கிரியோ " அங்கே யாரையும் தெரியலையேப்பா' என றான் குழப்பத்துடன்.

"ஐயோ பார்வை வேற போய்ட்டது போலிருக்கே" என்று சொல்லி மேல் துண்டை வீசி இரண்டு பேரைக் கூப்பிட்டான்.

"என்ன அப்பு நம்ம அண்ணாச்சிக்கு என்ன ஆச்சு?"என்று கேட்டுக் கொண்டே ஓடி வந்தார்கள். "அப்பூ ... நம்ம, அண்ணாச்சிக்கு இப்படி ஆய்ட்டதே, ஐயோ" என்று பாசாங்காக அழுதார்கள். உட்கார்ந்திருந்த போக்கிரியைப் படுக்க வைத்து விட்டார்கள். ஒருத்தன் ஊருக்குள்ளாற போய் கட்டிலோடு வந்தான். போக்கிரிக்குக் கண்களையே திறக்க முடியவில்லை. காச்சல்காரன்போல் முனக ஆரம்பித்தான்.

கட்டிலில் அவனைக் கிடத்தி ஊருக்குள் கொண்டு வந்தார்கள். 'நம்ம அண்ணாச்சிக்கு இப்படி ஆகிவிட்டதே' என்று ஒருவனும்' எப்படியாப்பட்ட உடம்பு...கல்லுக்கணக்கா...பீமசேன ராசா மாதிரி இருந்தாரே.. எல்லோரையும் அநாதையாக் கிட்டு போயிட்டாரே'... என்று மற்றொருவனும் சொல்லிக் கொண்டே அழுதார்கள்.

ஊருக்குள் வைத்தியர் பார்த்துவிட்டு "எல்லாம் முடிஞ்சிடுச்சி முடிஞ்சி ரொம்ப நேரம் ஆகியிருக்கும் போலிருக்கே.. செய்ய வேண்டிய ஏது காரங்களைச் செய்துறலாம்" என்றார். கிழவி

கள் வாயிலயும் வயித்துலயும் அடித்துக் கொண்டு அழுதார்கள். வீடு இழவுக்களை கட்டியது. போக்கிரியும் தான் செத்துவிட்டதாக நம்பினான்.

முறையான சாவுக்கு உண்டான குளிப்பாட்டுறது எல்லாம் இல்லாமல் சட்டுப்புட்டென்று அவனைப் பாடையில் வைத்துக் கட்டினார்கள். 'கோயிந்தா' என்று கூவிக் கொண்டே சுடு காட்டுக்குப் போனார்கள்.

பலகாரக்கடை செட்டியார், "சண்டாளப் பாவிப்பயல் ஒழிந்தான்" என்று மகிழ்ச்சியோடு கூறினார். அது போக்கிரியின் காதில் விழுந்தது. உடனே அவன் தலையைத் தூக்கிச் செட்டியாரைப் பார்த்து, "டேய் நான் செத்துப் போயிட்டதாலேதானே இப்படியெல்லாம் பேசுதே. நாமட்டும் இப்ப உயிரோடு இருந்தா" என்று சொல்லிப் பல்லை நறநறவென்று கடித்தான்.

இளவட்டங்கள் இதனைப் பார்த்ததும் "டேய் சவம் பேசுதடா. சவம் பேசுனா ஊருக்கு ஆகாதுடா" என்று சொல்லி கம்பால் அவனது மூக்காந்தண்டில் ஒரே போடாகப் போட்டு அவன் கதையைத் தீர்த்து விட்டார்கள்.

## தெண்டு விழுந்த கதை

கரிசல் காட்டில் ஒரு கோடை உழவின் போது மத்தியானக் கஞ்சி குடிக்க வேலையாட்கள் கருவமரத்தடியில் உட்கார்ந்தார்கள். கரைக்கப்பட்ட கம்மங்கஞ்சி கலயத்திலிருந்து கைகளில் ஊற்றப் படுகிறது. அதை ரண்டுகைகளையும் சேர்த்து ஏந்தி வாங்கிக் கொண்டு கைகளில் வாய் பதித்து உறிஞ்சிக் குடிக்க வேண்டும். இப்படி ஒருத்தன் குடித்துக் கொண்டிருந்தபோது மரத்தின் மேலிருந்து ஒரு சிறிய தெண்டு இவன் கைக் கஞ்சியில் விழுந்தது. தெண்டு என்பது ஓணான் வகையில் சிறியது. விழுந்த தெண்டு எப்படி போனது என்று தெரியவில்லை. பசியாவலோடு உறிஞ்சிக் குடித்துக் கொண்டிருக்கும்போது அது தனது வயிற்றுக்குள் தான் போயிருக்க வேண்டும் என்று நம்பி விட்டான். மற்றவர்களும் அப்படித்தான் என்று வேடிக்கைக்காகச் சொன்னார்கள்.

இவனோ, உண்மை என்று நம்பி அவஸ்தைப் பட்டான். வாய்க்குள் விரலைவிட்டு வாந்தி எடுத்து தெண்டு வந்துவிட்டதா என்று பார்த்தான். இல்லை. மறுநாள் பேதிக்குச் சாப்பிட்டுப் பார்த்தான். வரவில்லை.

அவனுக்குப் பயம் பிடித்துக் கொண்டது. வயிற்றுக்குள் தெண்டு பிராண்டுவது போன்று தோணும். வயிற்றுவலி தாங்க முடியவில்லை என்று அலறுவான். சாப்பிட முடியவில்லை; தூங்க முடியவில்லை, நிம்மதியில்லை. ஆள் மெலிந்து படுக் கையில் விழுந்தான்.

வைத்தியர்களை வரவழைத்துப் பார்த்தார்கள். பயனில்லை. சோதிடர்களோ 'கிரகங்காணாது' என்றார்கள்.

படுக்கையில் விழுந்தவனைப் பலர் பார்க்க வந்தார்கள். அதில் ஒருவர், அவனை அழைத்துப் போய் ஒரு வைத்தியரி டம்காட்ட, அவரும் நாடிபிடித்து பார்த்தார். 'தெண்டு உள்ளே தான் கிடக்கு எடுத்துப்புடலாம்' என்றார்.

மறுநாள் வரச் சொன்னார். அவன் சொன்ன சைசில் ஒரு தெண்டைப் பிடித்து கொதிக்கிற நீரில் ஊற வைத்து கொண்டார். மறுநாள் அவனுக்கு வாந்திக்கு மருந்து கொடுத்து, தோட்டத்து பின்பக்கம் பானையில் வாந்தி எடுக்குமாறு வேண்டினார். அவனும் எடுத்து விட்டு வந்தான். அவரோ அவனை அதனைக் கிளறிப் பார்க்குமாறு சொன்னார். அவனும் பார்த்த போது வெந்த தெண்டு கிடந்தது. "அதே தான். அதே தெண்டு வந்திருச்சி வந்திருச்சி," என்று குதித்தான், வைத்தியரோ "இனி ஒண்ணும் செய்யாது. போ. இந்தப் பஸ்பத்தை மட்டும் ஒரு மூணு நாளைக்குத் தேனுல குழைச்சிச் சாப்பிடு," என்றார்.

அவன் மளமள வென்று தெளிந்து பழையஉடம்பும் ஆரோக் கியமும் பெற்றான்.

அவனது நோயிலும் அவரது வைத்தியத்திலும் உளவியல் உள்ளது. இல்லாததை இருப்பதுபோல் நினைப்பது,

## பேய் பிடித்தல்

ஆழ்மன நிலையில் ஏற்படும் பாதிப்புக்களே பேய் பிடித் தோரின் குணநலன்களாக அமைகின்றன. எனவே பேய்பிடித் தல் என்பது மனநோயே.

ஒருவரது மனநிலையின் உறுதியைப் பொறுத்தும் ஆளுமையைப் பொறுத்தும் அவரது மனநலம் அமையும். மனநோய் உடலியல் உளவியல் மற்றும் சமூகவியல் காரணங்களால் தோன்றுகின்றது. உடலமைப்பு, பாரம்பரியம், குடும்பச் சூழ்நிலை, சமூகக் கலாச்

சாரம் பொருளாதார நிலைகள், பண்பியல் தொகுப்பு மற்றும் மன வளர்ச்சிக் குறைபாடுகள் உண்டாகும் போது மனநோய் ஏற்படும் என்கின்றனர்.

ஏமாற்றங்களால் ஏற்படும் உணர்வுகளின் ஏற்ற இறக்கங் களால் நரம்பு மண்டலப் பகுதிகள் பாதிக்கப்பட்டு நரம்பியல் தொடர்பான நோய்கள் மூர்ச்சைநோய், காக்காவலிப்பு, ஸிசோபிரனியா போன்ற நோய்கள் உண்டாகும். இந்நோய் அடைந்தவர்கள் தம் உணர்வைத் தாமே இழந்து விடு கின்றனர். இதனையே பேய் நோயாளியின் உடம்பில் புகுந்து கொண்டு அவனை ஆட்டிப்படைக்கிறது என்று நம்பும் அள வுக்கு நரம்புச் சீர்குலைவுகள் இருக்கின்றன.

பேயோட்டும் சடங்கும் உளவியல் மருத்துவத்திற்கு நிகரா னது. பேய்பிடித்தவரைக் குணப்படுத்துவதற்கு உளவியல் மருத்துவரும், மந்திரவாதியும் பின்பற்றும் சிகிச்சை முறைகள் வேறுபட்டாலும் அவற்றின் அடிப்படை உளவியல் சிகிச்சை முறையாக அமைந்துள்ளன.

## செய்வினைச் சடங்குகள்

தனக்குச் செய்வினை வைக்கப்பட்டுள்ளது என்று அறியாத வரை ஒருவன் எவ்வித பாதிப்பும் அடைவதில்லை. செய் வினை வைத்ததை அறிந்துகொண்ட பின் அவன் அச்சத்தால் ஆடுகிறான். தனது வீட்டில் செய்வினைப் பொருட்களைக் காண நேரிட்டால் அவன் உள்ளம் மேலும் அதிர்கிறது. இவை படிப்படியான மன அதிர்ச்சியைத் தந்து மனநோயைத் தருகின்றன. இதற்குப்பின் தன் குடும்பத்தில் ஏற்படும் எல்லாத் துன்பங்களுக்கும் தனக்கு வைக்கப்பட்ட செய்வினையே காரணம் என்று மனம் புழுங்குகிறான். மன உளைச்சலுக்கும் வீட்டில் நடக்கும் துன்பங்களுக்கும் காரணமான செய்வினையை அகற்றும் சடங்கு அடுத்து நடைபெறுகிறது. மந்திர வாதிகள், சம்பந்தப்பட்டோரின் நம்பிக்கைக்குத் தகுந்தவாறு சடங்கை ஆற்றுகின்றனர். பாதிப்புக்கு உள்ளானவர்கள், இச்சடங்கால் செய்வினை ஆற்றப்பட்டது என்று நம்புகின்றனர். எனவே அவர்கள் மனம் தேறுகின்றனர்; அச்சம் குறைகிறது. நோயும் தீர்கிறது. எனவே, செய்வினையால் ஏற்படும் பாதிப்புக்கு அதன் மீது கொண்ட நம்பிக்கையின் அளவும் சம்பந்தப்பட்ட்

வரின் உளவியல் அமைப்பும் காரணமாகின்றன, என்பார் தே. ஞானசேகரன் (மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள், ப.86) ஒருவரைச் செயற்கை தூக்கத்தில் ஆழ்த்துவதை ஹிப்னாட்டிசம் (Hypnotism) என அழைப்பர். இம்முறையின் மூலம் ஒருவரை எளிதில் மயக்கி எக்காரியத்தையும் செய்து விட முடியும். வசிய மருந்து உட்கொண்டவரின் உடலைச் சோர்வடையச் செய்து, மூளையைச் செயலிழக்கச் செய்கிறது. செயற்கைத் தூக்கத்தை அடையச் செய்து, பழைய நினைவுகளை மறந்து, நடப்பனவற்றை மட்டுமே நினைவில் கொள்கிறார். இந்நிலையை அடைந்தவரிடத்தில் அவர் இசைவுடன் எக்காரியத்தையும் முடிக்க முடியும். அளவுக்கு அதிகமாக மது அருந்தியவனின் நிலையை வசிய மருந்து ஏற்படுத்துகிறது. இத்தகு மன நிலையை அடைந்தவரிடம் அடிக்கடி பேசுவதும், அன்பு காட்டுவதும், வசியத்திற்குப் பரிகாரம் செய்வதும் போன்ற சூழலை ஏற்படுத்துவதன் மூலமாக மாற்ற முடியும்.

பிறழ்வு இவ்வாறு உளவியலின் மூலம் நாட்டுப்புற இயலில்,

(i) பாலுணர்ச்சி வெளிப்பாடுகள்
ii) பாலுறவின் வெளிப்படையான வெளிப்பாடுகள்
iii) பாலுறவுகளின் குறியீடுகளான வெளிப்பாடுகள்
iv) உளவியல் சடங்குகளில் மறைந்திருக்கும் பாலியல் வெளிப்பாடுகள்.
v) உளவியல் மருத்துவம்

போன்றவை அமைந்துள்ள பாங்கினைக் காணலாம்.

# பயன் கொண்ட நூல்கள்

அம்பாப்பாட்டு, கனகராசு. அ., அம்பிகா பதிப்பகம், புதுச்சேரி, 1987.

ஆய்வு நோக்கில் நாட்டுப்புற மருத்துவம், வேங்கடேசன், க., சித்தர் கோட்டம், சென்னை-1976.

கலைக்களஞ்சியம் II, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை-1955.

காதல் வாழ்வு, தமிழண்ணல், செல்வி பதிப்பகம், காரைக்குடி-1960

காதலர் விடுகதைகள், இராமநாதன், ஆறு., சமுதாய சிற்பிகள் வெளியீட்டகம், புவனகிரி-1982.

கொங்கு நாட்டுப்புறப்பாடல்கள், கிருஷ்ணசாமி, க., மக்கள் வெளியீடு, சென்னை, 1980.

சமூக [உளவியல், பரமேஷ், செ.ரா., தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனம், சென்னை, 1978.

சிந்தனையாளர் ஃபிராய்டு, சந்திரமோகன், பிரேமா பிரசுரம்' சென்னை, 1961.

தமிழ்நாட்டு நாடோடிக் கதைகள், கி.ரா., என்.சி.பி.எச். சென்னை, 1966.

தமிழகத்தில் தெருக்கூத்து, அறிவு நம்பி, அமுத நிலையம், காரைக்குடி.,1986.

தமிழக நாட்டுபுறக் கதைகள், சண்முக சுந்தரம், க. பூம்புகார் பிரசுரம்,சென்னை, 1984,

தமிழில் விடுகதைகள், சுப்பிரமணியன், ச. வே, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1978.

தற்கால தமிழ்ச் சமூக நாவல்களில் பாலுணர்வு, மானுவேல் இரா. திருவேங்கடவன்', பல்கலைக் கழகம், திருப்பதி, 1986'

தாலாட்டு, தமிழண்ணல், பாவை நிலையம், காரைக்குடி 1963

திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்களில் சமுதாய அமைப்பு, சண்முகசுந்தரம்,க., காவ்யா, பெங்களூர், 1986.

தோற்பாவை நிழற்கூத்து, இராமசாமி, மதுரை காமராசர் பல்கலைக் கழகம் 1983

நாட்டார் வழக்காற்றியல், லூர்து, தே., மாணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1988

நாட்டார் வழக்காற்றியல், பாரிவேள் பதிப்பகம், பாளையங்கோட்டை, 1881

நாட்டுப்புற இயல் சிந்தனைகள், சண்முகசுந்தரம். சு., மணிவாசகர் நூலகம், சென்னை, 1981.

நாட்டுப்புறக் கதைகள், இராமநாதன், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1986.

நாட்டுப்புறவியல் I & II, இந்திய தமிழ் நாட்டுப்புறவியல் கழகம், அண்ணாமலை நகர், 1987.

நாட்டுப்புறவியல் கட்டுரைகள், வளவன். சா, மைதிலி பதிப்பகம், சென்னை, 1985.

நாட்டுப்புறவியலாய்வு, கருணாகரன், இந்திய தமிழ் நாட்டுப் புறவியல் கழகம், அண்ணாமலை நகர்,1989.

பாலை மலைப் பாடல்கள், கவிஞர். கோ. பெ.நா, என். சி. பி.எச்., சென்னை, 1986.

புராணச் சார்ப்பு கதைப்பாடல்களில் ஆண் பெண் உறவு நிலை, புதுமைப் பதிப்பகம், திருச்சி, 1982.

மக்கள் வாழ்வில் மந்திர சடங்குகள், ஞானசேகரன், தே., பார்த்திபன் பதிப்பகம், மதுரை, 1987

மனித உள்ளம், இராசமாணிக்கம், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1977.

மனோதத்துவமும் குடும்ப வாழ்க்கையும், சத்தியசாமுவேல், கழகம், சென்னை, 1953.

மேற்கு தமிழக நாட்டுப்புறவியல் ஓர் ஆய்வு, செங்கோ வரதராசன், என். சி. பி. எச், சென்னை,1988,

Folklore Literature in India, Sakthivel, Meena Pathippakam, Madurai, 1976.

# சிறப்புச் சொல்லகராதி

(எண்—பக்க எண்)




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
**International Institute of Tamil Studies**
டி. டி. டி ஐ (அஞ்சல்), தரமணி,
சென்னை - 600113.

## அறக்கட்டளைச் சொற்பொழிவு வெளியீடுகள்

| | |
|---|---|
| இஸ்லாம் வளர்த்த தமிழ் | 15 - 00 |
| தமிழரின் தாயகம் | 10 - 00 |
| உ வே சா. சங்க இலக்கியப் பதிப்புகள் | 10 00 |
| இனிக்கும் இராசநாயகம் | 60 00 |
| பாவாணரும் தனித்தமிழும் | 12 — 00 |
| தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள் | 10 — 00 |
| உ. வே. சா. காப்பியப் பதிப்புகள் | 10 - 00 |
| விவிலியம் திருக்குறள் சைவ சிந்தாந்தம் | 20 - 00 |
| அகலமும் ஆழமும் | 12 — 00 |
| செக்கிழுத்த செம்மல் சிதம்பரனார் | 15 - 00 |
| உ. வே. சா. இலக்கணப் பதிப்புகள் | 15 - 00 |
| மகாமதிப்பாவலர் | 11 00 |
| உலக முதன்மொழி தமிழ் | 12 — 00 |
| மறைமலையடிகளார் தனித்தமிழ்க் கொள்கை | 15 — 00 |
| தமிழ்தந்த வ.உ.சி | 15 — 00 |
| உ.வே.சா. ஒரு தமிழ் வாழ்வு | 15 - 00 |
| வண்ணக் களஞ்சியப் புலவரின் குத்பு நாயகம் | 15 00 |
| மு. வ. புதினங்களில் தமிழ் - தமிழினம் | 20 00 |
| பாவாணர் ஆய்வு நெறி | 25 - 00 |
| கிறித்தவமும் தமிழகமும் | 15 - 00 |
| நாமக்கல் கவிஞர் கவிதைகள் - தேசியம். காந்தியம் | 16 — 00 |
| தமிழில் அறிவியல் - அன்றும் இன்றும் | 25 00 |
| இதழாளர் ஆதித்தனார் | 26 — 00 |
| காந்தியப் பெருந்தலைவர் காமராசர். | 20 00 |
| மலையாளக் கவிதை | 15 — 00 |
| நாட்டுப்புறப் பாடல்களில் வரலாற்றுச் செய்திகள் | — — |